

# அரைப் பங்கு செலவில் இரு பங்கு வெளிச்சம் பெறுங்கள். பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்திப் பாருங்கள்.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் உடனே பொருத்துவதற்கு ஏற்றவாறு தயார் செய்யப்படுகிறது— லாம்ப், லாம்ப் ஹோல்டர், ஸ்டார்டர், ஸ்டார்டர் ஹோல்டர் மற்றும் பலாஸ்டுடன் சேர்ந்து, முன் கூட்டியே அது ஒரு கனெக்டருடன் இணைக்கப் படுகிறது. நீங்கள் செய்ய வேண்டியது இவ்வளவுதான் — ஸ்ட்ரிப்பின் இரு முனைகளையும் சுவரிலோ அல்லது மேலிருந்து கீழாகவோ ஆணிகள் போட்டு முடுக்கி விட வேண்டும், மெயின்களை கனெக்டருடன் இணைக்க வேண்டும். இப்போது விளக்கு எரிவதற்கு தயார்.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டில் ஒரு 40 வாட் பிலிப்ஸ் TL ப்ளுரோசெண்ட் லாம்ப் பொருத்தப்பட்டிருக்கிறது. இந்த லாம்ப் இரண்டு 100 வாட் பல்புகளை விட அதிக வெளிச்சம் தரக்கூடியது. இருப்பினும், ஒரு 40 வாட் பல்புக்கு வேண்டிய மின்சாரமே அதற்கு தேவையாகிறது. அதனால், மின்சாரச் செலவுக் குறைப்பின் மூலமே உங்களுக்கு அதிகமான லாபம் ஏற்படுகிறது.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டில் பொருத்தப்பட்டிருக்கும் ஒவ்வொரு மூலப்பொருளும் அதை அதிக நாட்கள் உழைக்க உதவுகின்றது. அதன் மூலம் உங்கள் பணத்திற்கு அதிகப்படியாகவே வெளிச்சத்தை நீங்கள் பெறுகிறீர்கள். உதாரணமாக, அதில் பொருத்தப்பட்டிருக்கும் பலாஸ்ட் லாம்பிலிருந்து முழு அளவு வெளிச்சத்தையும் பெறுவதற்கு ஏற்றவாறு தயார் செய்யப்பட்டிருக்கிறது. லாம்ப் ஹோல்டரும், ஸ்டார்ட்டர் ஹோல்டரும் கச்சிதமாக இணையுமாறு பொருத்தப்பட்டிருக்கிறது. அதனால் ஒவ்வொரு முறையும் உங்கள் லாம்ப் தடங்கலே இன்றி எரியும். ட்யூபை உருட்டவோ, திருகவோ வேண்டிய அவசியமில்லை.

வருங்காலத்தைப் பற்றி நன்கு சிந்தனை செய்து பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டில் பணத்தை முதலீடு செய்யுங்கள். அதைவிட சிறந்த லாம்ப் வேறெதுவுமில்லை.

**சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா ?**
**பிலிப்ஸ் வாங்குங்கள்.**
பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்.,

**பிலிப்ஸ்**



## கண்ணன் பிறந்த நாளன்று
## எண்ணம் இனிக்க ஓர் இசைத்தட்டு!

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு
முன்பு அம்புப் படுக்கையிலிருந்து பீஷ்மர்
தருமபுத்திரனுக்கு உபதேசித்த
'விஷ்ணு ஸஹஸ்ரநாமம்' அன்றிலிருந்து
இன்றுவரை கோடானுகோடி அடியார்களால்
ஓதப்பட்டு வருகிறது. பீஷ்மர் உபதேசித்தபோது
ஸ்ரீ விஷ்ணுவே கண்ணனாக பக்கத்தில் இருந்து
இந்த ஸஹஸ்ரநாமத்தைக்கேட்டு அங்கீகரித்தார்.
கண்ணனின் ஜயந்தித் திருநாளன்று விஷ்ணு
ஸஹஸ்ரநாமத்தை சிரவணம் செய்யுங்கள் அதோடு
ஆதிசங்கரர் அகமுருகிப் பாடிய பஜகோவிந்தத்
துதியில் பத்து சுலோகங்களையும் புல்லரிக்கும்
ராகமாலிகையில் கேட்டு ஆனந்தியுங்கள்.

**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**






GC 6640

# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, ஆடி 30 -- ஆகஸ்டு 15, 1971





''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அட்டைப் படம் : கோகுலாஷ்டமி-வித்யாஸ்ரதா



| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |





சென்னை, ஆடிட்டர் ஸ்ரீ P. ஜெயராமன் அவர்கள் குமாரியும், பேரளம் ஸ்ரீ பொன்னுசாமி அய்யர் அவர்களின் பேத்தியுமான சௌ. **நளினி**க்கும், திருவனந்தபுரம் ஸ்ரீ K. S. சுவாமிநாதன் அவர்கள் குமாரரும், கல்லிடைக்குறிச்சி ஸ்ரீ R.S.A. சங்கர அய்யர் அவர்கள் பேரனுமான சிரஞ்சீவி **சேகரு**க்கும், 14-7-71 தேதி அன்று சென்னை, ''ஆபட்ஸ்பரி''யில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு உறவினர்களும், நண்பர்களும், நகரப் பிரமுகர்கள் பலரும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்!



மலர் 31 □ இதழ் 3

# ஜனநாயகத்தின் அழிவு

அரசியல் சாஸன மாற்றுதல்களுக்குப் பிரதமர் பார்லிமெண்டின் பெருவாரி ஆதரவைப் பெற்றதில் ஆச்சரியம் ஏதுமில்லை. பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் இன்ன கொள்கையைத்தான் ஆதரிப்பது என்று முன்கூட்டியே முடிவு செய்துவிட்டிருந்தனர். எனவே, அரசியல் சாஸன மாற்ற மசோதாக்கள் நிறைவேறியதில் வியப்பதற்கோ, திருப்திப்படுவதற்கோ ஏதுமில்லை. நமது சமீப கால தேச சரித்திரத்திலேயே மிகவும் பயங்கரமான நெருக்கடி நிலைமையில் நாம் சிக்கிக் கொண்டுள்ள தற்சமயத்தில், அரசியல் சாஸனத்தை மாற்றும் விஷயத்தை அரசாங்கம் இத்தனை முக்கியமாகக் கருதி அதில் ஈடுபட்டிருப்பதே எனக்கு வியப்பு.

'சாஸனத்தின் எந்த ஷரத்தையும் மாற்றுவதற்குப் பார்லிமெண்ட் உரிமை பெற்றுள்ளது' என்பதாக மசோதாவை நிறைவேற்றிவிட்டு, 'நாங்கள் மக்களின் அடிப்படை உரிமைகளை மாற்றுவதற்கு இந்த சாஸனத் திருத்தங்களைப் பயன்படுத்த மாட்டோம்' என்றும் 'உறுதி மொழி' சொல்கிறார்கள். இவ்வித 'உறுதிமொழி'களுக்குச் சிறிதளவும் மதிப்பு கொடுப்பதற்கில்லை. அவை நம்பக்கூடிய உறுதிமொழிகள் அல்ல. இன்றைக்கு அரசாங்கம் நடத்துகிறவர்களை மட்டும் கருதித் திருத்தங்களுக்கு நாம் ஆட்சேபிக்கவில்லை. எதிர் காலத்தில் ஏற்படக் கூடிய அரசாங்கங்கள் சாஸனத் திருத்தம் தருகிற உரிமையால் என்னென்ன செய்யக் கூடும் என்பதையும் கருத்தில் கொண்டே ஆட்சேபிக்கிறோம். எந்தக் கூட்டம் அல்லது கட்சி அதிகாரத்துக்கு வந்தாலும் சர்க்காருக்கு வரம்புக்கு மிஞ்சிய அதிகாரங்கள் தரும் அரசியல் சாஸன மாறுதல்கள் செய்யக் கூடாது என்று ஆட்சேபிக்கிறோம்.

மக்களுக்கு அரசியல் சாஸனம் தரும் அடிப்படை உரிமைகளை மாற்ற மாட்டோம் என்று இன்றுள்ள சர்க்கார் வாக்குறுதி தந்தால் அதை எப்படி நிரந்தர ஏற்பாடாக ஏற்க முடியும்? மேலும், 'வாக்குறுதி'கள் எப்படிக் காற்றில் பறக்க விடப்படுகின்றன என்பதையும் நாம் நிதரிசனமாகப் பார்த்துவிட்டோம். சமஸ்தான மன்னர்களுக்கு ஜவாஹர்லால் நேருவும், வல்லபபாய் பட்டேலும் தந்த வாக்குறுதிகள் என்ன ஆயின? இந்த வாக்குறுதிகளை மேலும் உறுதிப்படுத்துவதற்காக சாஸனத்திலேயே ஒரு காப்பு ஷரத்தைச் சேர்த்திருந்தும்கூட, இந்தச் சத்திய பிரதிக்ஞையை முறிப்பதற்கு அரசாங்கம் கூசவே இல்லை என்று கண்டோம். எனவே, இப்போது மக்களின் சாஸன உரிமை பற்றிக் கூறப்படும் வாக்குறுதிகளை நம்பினால் அது அப்பட்டமான அரசியல் ஞான சூன்யமே யாகும்.

இப்போது செய்யப்படும் சாஸன மாறுதல்கள் நமது சுதந்திரத்தை ஸ்தாபித்த பெரியோர்களுக்கு மகத்தான அபசாரம் செய்வதாகும். யதேச்சாதிகாரத்துக்கு இடமே தராத பெரிய அரணாக அந்தப் பெரியோர்கள் அரசியல் சாஸனத்தை வகுத்தனர். சாஸனத்தை இஷ்டப்படி மாற்றுவதற்குப் பார்லிமெண்டிடம் அதிகாரம் தருகிற 'திருத்தங்களின்' நோக்கம் யதேச்சாதிகாரமேயாகும். சுதந்திர ஸ்தாபகர்களின் கருத்துக்கு நேர்மாறாக சுப்ரீம் கோர்ட்டின் சுதந்திரத்தைப் பறிப்பவை இத்திருத்தங்கள்.

கடந்த பொதுத் தேர்தலைக் குறித்து நாடெங்கும் பரவியுள்ள புகார்களைப் பார்க்கும்போது இப்போதுள்ள பார்லிமெண்ட் உண்மையாக மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கிறது என்று சொல்வதற்கில்லை. தேர்தல் முடிவுகளை மாற்றுவதில் உள்ள இடர்ப்பாடுகளை அனைவரும் அறிவர். இன்றுள்ள பார்லிமெண்டு தன்னுடைய மிகப் பெருவாரியான பலத்தைக் கொண்டு ஜனநாயகத்தை அழித்து யதேச்சாதிகாரத்தைக் கொண்டு வருவதற்கான ஏற்பாட்டைச் செய்ய நினைக்கிறது. யதேச்சாதிகாரத்தை ஒரு முறை ஏற்படுத்தி விட்

டால் போதும்; அது என்றுமே தன்னை அசைக்க முடியாதபடி வேரூன்றிக் கொள்ளும்.

இப்போது பாரதத்தின் பார்லிமெண்டில் பெரும்பான்மையாக இருப்பவர்கள் மக்களின் ஜீவாதார உரிமைகளைக் கொலை செய்ய முடிவு செய்துவிட்டார்கள். மக்களின் சுபிட்சத்துக்கும் சுதந்திரத்துக்கும் அத்தியாவசியமானவை என்று சுதந்திர ஸ்தாபகர்கள் கருதிய உரிமைகளைப் பறிக்கத் தீர்மானித்து விட்டிருக்கின்றனர். இதை மக்கள் ஒப்புக்கொள்ள முடியாது.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஹைகோர்ட் நீதிபதிகளை நியமிப்பதில் ராஜ்ய முதன் மந்திரிகளுக்குப் பொறுப்புத் தருவது இதுகாறும் இருந்து வந்த பழக்கத்துக்கு விரோதமானது. இது மிகவும் நவநவ ஏற்பாடு. இதனால் ஹைகோர்ட்களின் சுதந்திரத்துக்கே ஊறு விளைகிறது. ராஜ்ய சர்க்காரே சம்பந்தப்பட்டுள்ள வழக்குகளில் ஹைகோர்ட் முன்போல் பாரபட்சமின்றியும் சுதந்திரமாகவும் நடக்குமா என்று சர்க்காரை ஆட்சேபிக்கிறவர்களுக்கு ஐயப்பாடு ஏற்படுகிறது. இதனால்தான் வெளி ராஜ்ய நீதிபதியைக் கொண்டு இதுபோன்ற பிரச்னைகளை விசாரிக்க வேண்டும் என்ற கோரிக்கை அடிக்கடி எழுகிறது. உதாரணமாக, தமிழக முதன் மந்திரிக்கு அண்ணாமலை சர்வ கலாசாலையில் டாக்டர் பட்டம் வழங்கப்பட்டதை யடுத்து அங்கு ஏற்பட்ட போலீஸ் வன்முறையை வெளி ராஜ்ய நீதிபதியைக் கொண்டு விசாரணை செய்ய வேண்டும் என்று மாணவர்கள் கோருகின்றனர்.

ஹைகோர்ட் தீர்ப்பை ஆட்சேபித்து ஸுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்ய இடம் இருப்பதாலேயே ஹைகோர்ட்களின் பழைய அந்தஸ்து பெருமளவுக்குக் குறைந்துள்ளது. இப்போது நீதிபதிகளை நியமிப்பதிலும், நீக்குவதிலும் முதன் மந்திரிகள் பெற்றுள்ள செல்வாக்கு ஹைகோர்ட்டின் எஞ்சியுள்ள அந்தஸ்தையும் குறைத்து, மக்களுக்கு நீதிபதிகளிடம் இருந்த நம்பிக்கையையும் குலைத்து விட்டது. ஹைகோர்ட் நீதிபதிகளின் தகுதிகளை ஆராய்ந்து பார்க்கச் சகல வாய்ப்பும் படைத்த ஸுப்ரீம் கோர்ட்டிடமே நியமன அதிகாரம் பூரணமாக இருக்க வேண்டும். நீதிபதிகள் சுதந்திரமாகச் செயல்படுவதும், மக்களுக்கு அவர்களிடம் நம்பிக்கை இருப்பதும் அதிமுக்கியமான விஷயங்களாகும்.

★

அரசாங்கம், தேசம், மக்கள் என்ற மூன்றும் சேர்ந்ததே நாட்டு வாழ்வு. இவற்றில் அரசாங்கம் என்பது தேச மக்களால், தேச நலனுக்கான அத்தியாவசியப் பணிகளை ஆற்றுவதற்காக நிறுவப்படும் அமைப்பு. எந்தத் தேசமும் அதன் அரசாங்கத்தின் மூலம் பலம் பெற்றுவிட முடியாது. இவ்வாறு எண்ணுவது வெறும் பிரமை. தேசம்தான் அரசாங்கத்துக்குப் பலம் ஊட்டுவது. பொன் முட்டை இடும் வாத்தையே கொன்ற அறிவீனம் போன்றதுதான், அரசாங்கத்திடம் அதிக பலம் தந்து அது தேசத்தை ஆட்டிவைக்க இடம் தருவது. அரசாங்கம் தனது எல்லைக் கோட்டை மீறாதபடி மக்கள் உன்னிப்புடன் பார்த்துக் கொள்ள வேண்டும்.

தேசம் என்பது தத்துவ ரீதியில் மட்டும் இருப்பதாகும்; அது யதார்த்தத்தில் உயிர் படைத்த ஒரு வியக்தியல்ல. தனிமனிதர்கள் பலர் சேர்ந்ததே தேசம். இந்த மனிதர்கள் அறிவாளிகளாகவும், உழைப்பாளிகளாகவும் இருந்தாலே தேசம் முன்னேறும். தனி மனிதர்கள் மந்தமாகவும், உழைப்பில் ஆர்வம் இல்லாமலும், விசால அறிவு பெறாமலும் இருந்தால் தேசம் பலவீனமடைந்து மரணப் பாதையில் செல்லத் தொடங்கும்.

மக்களின் சுதந்திரத்தையும், சக்தியையும் அரசாங்கம் புசிக்கத் தொடங்கி, இந்த போஜனத்தால் தனக்குப் பலம் தேடிக் கொள்ள முயன்றால் அது விபரீதமாகவே முடியும். மக்களின் சக்தியை உறிஞ்ச உறிஞ்சச் சர்க்காரின் சக்தியும் குன்றிக் கொண்டே வரும். மக்கள் பலவீனமடைந்து விட்டால், அதன் பின் தேசத்துக்கு எங்கிருந்து பலம் வர முடியும்? பலவீனமான தேசத்தின் அரசாங்கத்துக்கு ஏது பலம்?

ஆனபடியால் அரசியல் சாஸனம் நம் மக்களுக்குத் தரும் உரிமைகளை எப்பாடு பட்டேனும் பாதுகாக்க வேண்டும். பொன் முட்டையிடும் வாத்தைக் கொலைக்கு ஆளாகாமல் காக்க வேண்டும். மக்கள் பலமிழந்தால், நாடு பலமிழந்து, அரசாங்கமும் பலமிழக்கும் என்ற உண்மையைக் கம்யூனிஸ நாடுகளும் உணரத் தொடங்கியுள்ளன. அதனால்தான், தங்களது யதேச்சாதிகார சித்தாந்தம் தோற்றுவிட்டதாகப் பகிரங்கமாக ஒப்புக் கொள்ளாவிடினும், கம்யூனிஸ நாடுகளும் தங்கள் கொள்கைகளைச் சிறுகச் சிறுக மாற்றிக் கொண்டு வருகின்றன.

★

ஆசியா முழுவதிலும் ஆதிக்கம் செலுத்துகிற சாம்ராஜ்யமாக உருவெடுக்க வேண்டும் என்று செஞ்சீனம் பேராசை கொண்டுள்ளது. சீனத்தின் பேராசையே இந்தியாவின் பேராபத்து. சீனம் ஒருபுறத்தில் யாஹ்யா கானுக்கு ஆயுதம் வழங்குகிறது; மறுபுறத்திலோ வங்காளிகளை வன்முறைப் புரட்சியில் தூண்டி விடுகிறது. இவற்றோடு, தனக்

னும் அமெரிக்காவுக்கும் இடையே ஒரு புதிய உறவையும் சீனம் வளர்த்துக் கொண்டிருக்கிறது.

★

மேற்கத்திய வல்லரசுகள் இந்தியாவுடன் நட்பைக் குலைத்துக் கொள்ள விரும்பவில்லை. ஆயினும் அவை இந்தியாவுக்கு எதிராகப் பாகிஸ்தானிடம் அதிக நட்புக் காட்டுகின்றன. இது ஏன் என்று அரசியல் சூட்சுமங்களை ஆராயும் மேதை தத்துவ நிபுணர்கள் தான் கூறக் கூடும்.

நாம் கிழக்கு வங்கக் கொந்தளிப்பைப் பயன்படுத்திக் கொண்டு, பாகிஸ்தான் சிதைந்து போவதை ஆதரித்தால், மேற்கத்திய வல்லரசுகள் பாகிஸ்தானிடம் கொண்டுள்ள நட்பு மேலும் மேலும் நமக்குப் பாதகமாக வளரும். 'பாகிஸ்தான் பிளவுபடுவதை ஊக்கினால் அந்தத் தேசம் பலவீனமடையும், அது இந்தியாவுக்கு நல்லதாகும்' என்று கருதுவது மாயமேயாகும். மாறாக, பாகிஸ்தானுக்கு மேற்கு வல்லரசுகள் காட்டும் ஆதரவு பெருகி, நிலைமை இன்னமும் மோசமாகும்.

கிழக்கு வங்கம் நன் நியாயமான உரிமைகளைப் பெற வேண்டும் என்று நான் மனப்பூர்வமாக விரும்புகிறேனாயினும், பாகிஸ்தானின் சிதைவுக்கு இந்தியா உதவலாகாது என்பதே என் உறுதியான கருத்து. பாகிஸ்தானுடன் நமக்குள்ள பேதங்களைக் களைந்து, அந்த நாட்டுடன் நட்புப் பெறுவதே நமக்கு நன்மை பயக்கும் எனக் கருதுகிறேன். நம்மைச் சுற்றிப் பகை பாராட்டும் நாடுகளை வைத்துக் கொண்டிருப்பது நல்லதல்ல. நம்மிடம் உறுதியான நட்புக் கொண்ட வெளி









நாடுகள் உள்ளனவா என்பதே சந்தேகமாயிருக்கிற நிலைமையில், அண்டை நாடுகளின் விரோதத்தை வளர்த்துக் கொள்கிற அளவுக்கு நாம் பலம் பெற்றிருக்கவில்லை. இக்காரணத்தால்தான் நான் இப்போதே கிழக்குப் பாகிஸ்தானைச் சுதந்திர நாடாக அங்கீகரிக்க வேண்டும் என்ற கவர்ச்சிகரமான கொள்கையை வரவேற்கவில்லை.

★

மதுவிலக்கை ரத்து செய்யக் கூடாது என்று ஆகஸ்ட் மூன்றாந் தேதி மீளவும் முதன் மந்திரிக்கு ஒரு கோரிக்கை விடுத்தேன்.

மதுவிலக்கு ரத்தாவதை எதிர்த்துச் செய்யும் கிளர்ச்சி வலுவுடன் நடக்கிறதா, இல்லையா என்பதைப் பார்த்து முடிவு செய்யும் விஷயமல்ல இது. மதுவிலக்கை ரத்து செய்து, நாடெங்கிலும் பெரிய ஏலத் தொகை தருகிறவர்களைக் கொண்டு கள்ளு — சாராயக் கடைகளைத் திறப்பது மக்களுக்கு நல்லதா என்பதைப் பார்த்தே முடிவு செய்ய வேண்டும்.

கள்ளுக் கடைகளிலிருந்து சர்க்காருக்குச் சிறிது வருமானம் கிடைக்கலாம். ஆனால் நன் மக்களுக்குச் சர்க்காரிடம் உண்மையான மதிப்பு - பயம் கலக்காத மதிப்பு - இருக்குமா? என் கோரிக்கையைக் கேட்டு நடக்கும் பெருந்தன்மை முதன் மந்திரிக்கு இருக்குமாயின், அவரிடம் மக்கள் இன்றுள்ளதை விடப் பத்து மடங்கு அன்பு செலுத்துவார்கள். ஆட்சி செய்கிறவர்களுக்கு மக்களின் அன்பே பலம்.

# முந்நூறு காணும் முனிசிரேஷ்டர்

பக்தர் வரிசையில் முதன்மையிடம் பெற்ற பிரஹ்லாதனின் அவதாரமாகக் கருதப்படுபவர் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள். துவைத சமயாசாரியர்களில் சிறப்பிடம் பெற்ற பரம பக்தர், புத்திமான் அவர். அதோடு அருள் உந்தித் தள்ள அற்புதங்கள் பல புரிந்த சித்தரும் ஆவார்.

கும்பகோணம் ஸுதீந்திர ஸ்வாமிகள், வேங்கடநாதனின் புத்தி விலாசத்தைக் கண்டு மகிழ்ந்து அவரைத் தமக்கு அடுத்த மடாதிபதியாக நியமித்தார். சாக்ஷாத் சரஸ்வதி தேவியே ஆக்ஞையிட்டதன் மீது இல்லறத்தைத் துறந்தார் ஸ்ரீ வேங்கடநாதர். மடாதிபதியானார். ராகவேந்திரர் என்று திருநாமம் கொண்டார். ஸ்ரீமத்வ சம்பிரதாயத்தின் ஆணிவேர்களில் ஒன்றானார். தவித்து வந்த நெஞ்சங்களுக்கெல்லாம் தண்ணருள் பொழியும் காமதேனுவானார். இந்த அருட்பாங்கிலேயே பல அற்புதச் செயல்களைப் புரிந்தார்.



அந்த அற்புதங்களில் ஒன்றே ஸ்ரீ ராகவேந்திரர் அதோனிக்கு அருகேயுள்ள மந்திராலயத்தை இருப்பிடமாகக் கொள்ளக் காரணமாயிற்று. அதோனியில் நவாபின் பிரதிநிதியாக இருந்த முஸ்லீம் எங்கோ வெளிச் செல்கையில் அவருக்குத் தெலுங்கு மொழியில் ஓர் அவசரக் கடிதம் வந்தது. அவருக்கு அம்மொழி தெரியாது. அருகே இருந்த அப்பாவி வெங்கண்ணாவை அழைத்துக் கடிதத்தைப் படிக்கச் சொன்னார். பரமசாதுவான வெங்கண்ணா அடியோடு எழுத்தறிவற்றவர். மன்னரின் பிரதிநிதியிடம் அதைச் சொல்லவும் நடுக்கம். ''ராகவேந்திரா, நீ விட்ட வழி'' என்று மனத்துக்குள் அலறியபடி அந்தக் கடிதத்தை வாங்கிக் கொண்டார். என்ன ஆச்சரியம், 'மளமள'வென்று அதைப் படித்துவிட்டார் வெங்கண்ணா!

கடிதத்திலிருந்து ஒரு முக்கியமான சமாசாரம் அறிந்த முஸ்லீம் அதிகாரி மனமகிழ்ந்து வெங்கண்ணாவுக்குப் பரிசுகள் வழங்கினார்.

''இதற்கெல்லாம் நான் அல்ல பாத்திரம். எழுத்தறிவற்ற ஏழையேன் எண்ணிய மாத்திரத்தில் எனக்குக் கல்வியறிவை வருஷித்த தயாளு ராகவேந்திர ஸ்வாமிக்கு சம்மானம் செய்யுங்கள்'' என்றார் வெங்கண்ணா.

வெங்கண்ணாவின் வெள்ளை உள்ளத்தைக் கண்டு மகிழ்ந்த முஸ்லீம் அதிகாரி அவருக்கு உயர் பதவி தந்து, அவரது குரு ராகவேந்திரரிடம் தாமும் சரண்புகுந்து அருள் பெற்றார். மந்திராலய கிராமத்தை ராகவேந்திரருக்கு அர்ப்பணம் செய்தார்.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன் ஆவணி மாதப் பூர்ணிமை. ராகவேந்திர ஸ்வாமிகள் வீணையை மீட்டியபடி ஞானத்தில் கனிந்த கானத்தால்,

**இந்து எனகே கோவிந்த நின்ன பாதார -**
**விந்தவ தோரோ முகுந்த**

(கோவிந்தா, இன்றே எனக்கு நின் திருவடித் தாமரைகளைக் காட்டி அருள்வாய்) என்று பாடியவாறு மந்திராலயத்தில் துங்கபத்திரைக் கரையில் ஜீவசமாதி கொண்டார்.

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் சமாதி கொண்ட முந்நூறாவது ஆராதனை தினம் நிகழ்ந்துள்ள இச்சமயத்தில் அப்புனிதரைப் பணிந்து அநுக்கிரகத்தைக் கோருகிறோம்.



# மகுடபதி

அமரர் கல்கி

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## பைத்தியம் யாருக்கு?

கவுண்டருடன் வண்டியிலிருந்து இறங்கிய தடியர்கள் இருவரும் துப்பாக்கி வேட்டுத் தீர்த்த திசையை நோக்கி விரைந்து போனார்கள். அவர்கள் கோயமுத்தூரில் அன்று மாலை தன்னைத் தொடர்ந்து வந்தவர்கள்தான் என்பதை மகுடபதி கவனித்தான். கட்டை வண்டிகளில் தொங்கிய லாந்தர்களின் வெளிச்சத்தில் இதெல்லாம் ஓர் அதிசயமான சினிமாக் காட்சிபோல் தெரிந்தது.

காட்டுக்குள் புகுந்த தடியர்கள் இருவரும் சற்று நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்தார்கள். ஒருவன் கையில் ஒரு செத்த முயலைத் தூக்கிக் கொண்டு வந்தான். முயலின் வயிற்றிலிருந்து இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. இந்தக் கோரக் காட்சியைக் காணச் சகியாமல் மகுடபதி கண்ணை மூடிக் கொண்டான். முயலின் மேல் பாய்ந்த குண்டு உண்மையில் தன்னை உத்தேசித்து விடப்பட்டதுதான் என்பது அவன் உள்ளத்துக்குத் தெரிந்து போயிற்று.

"ஆமாம்; பக்கத்துக் காட்டில் ஏதோ சலசலப்புச் சத்தம் கேட்டுத்தான் கவுண்டர் மோட்டாரை நிறுத்தியிருக்கிறார். தாம் தேடி வந்த ஆசாமி அங்கே காட்டில் ஒளிந்து கொண்டிருக்கலாம் என்று எதிர்பார்த்துத்தான் துப்பாக்கி வேட்டுத் தீர்த்திருக்கிறார். அர்த்த ராத்திரியில் முயல் வேட்டையாட அவர் வரவில்லை என்பது நிச்சயம். மனித வேட்டையாடத்தான் வந்திருக்கிறார்!"

இந்த நினைவினால் மகுடபதியின் தேகம் நடுங்கிற்று. அந்த ஜனவரி மாதத்துக் குளிரில் அவனுடைய உடம்பு சொட்ட வியர்த்து விட்டது.

கவுண்டரும் மற்றவர்களும் காரில் மறுபடியும் ஏறி உட்கார்ந்தார்கள். கார் கிளம்புவதற்குள்ளே கள்ளிப்பட்டிக் கவுண்டர் முன்னாடியிருந்த வண்டிக்காரனைப் பார்த்து, "ஏனப்பா! நீங்க வருகிற வழியிலேயே யாராவது ஒரு பையனைக் கண்டீங்களா?" என்று கேட்டார்.

அப்போது செங்கோடன், மகுடபதி இரண்டு பேருடைய நெஞ்சும் பட் பட் என்று அடித்துக் கொண்டன.

முன் வண்டிக்காரன், "இல்லீங்களே! ஒரு ஈ காக்காய் வழியிலே கிடையாது" என்று பதில் சொன்னது காதில் விழுந்த பிறகுதான், அவர்களுடைய பதற்றம் அடங்கிற்று.

கார் உடனே கிளம்பி, கட்டை வண்டிகள் எல்லாவற்றையும் தாண்டிக் கொண்டு, சாலைப் புழுதியை அமோகமாய்க் கிளப்பி விட்டு விட்டு அதிவேகமாய்ச் சென்று மறைந்தது.

பிறகு செங்கோடக் கவுண்டன் மகுடபதியைப் பற்றி மேலும் விசாரித்தான்.

கடைசியில், ''தம்பி! நான் சொல்கிறதைக் கேள். என் மாமியார் வீடு சேவல் பாளையத்தில்தான் இருக்கிறது. கோழி கூப்பிடுகிற நேரத்துக்கு அங்கே போய்ச் சேர்வோம். உன்னை என் மாமியார் வீட்டில் விட்டு விட்டுப் போகிறேன். நன்றாய்ப் பார்த்துக் கொள்வார்கள். பகலெல்லாம் படுத்துத் தூங்கு. திரும்ப நான் இராத்திரி வருகிறேன். பேசாமல் என்னோடு ஊருக்கு வந்துவிடு. காங்கிரஸும் காந்தியும் சுயராஜ்யம் கொண்டு வருகிற காரியம் நீ ஒருவன் இல்லாததனாலே கெட்டுப் போய் விடாது....'' என்றான்.

மருடபதி உடம்பும் மனமும் சோர்ந்திருந்தான். அந்த நிலைமையில் செங்கோடக் கவுண்டன் சொன்னது அவனுக்குப் பக்குவமாகப் பட்டது. ''ஆகட்டும்!'' என்றான் மருடபதி. ஆனால் வண்டி கடகடவென்று ஆடிக் கொண்டு போய்க் கொண்டிருந்தபோது அவனுடைய மனமும் ஊசலாடிக் கொண்டிருந்தது. ''வாஸ்தவம்தான்! காங்கிரஸும் காந்தி மகானும் நான் ஒருவன் இல்லாமலே காரியத்தைப் பார்த்துக் கொள்வார்கள். ஆனால் செந்திருவின் கதி என்ன? அவளும் எப்படியாவது போகட்டும் என்று விட்டு விடுகிறதா?'' என்ற கேள்வி அவன் மனத்தில் எழுந்து கொண்டேயிருந்தது. அப்படியே கண்ணயர்ந்து விட்டான்.

கோயமுத்தூருக்கு இப்பால் ஆறு மைல் தூரத்தில் சேவல்பாளையம் கிராமம் இருக்கிறது. பெரிய சாலையிலிருந்து பிரிந்து ஒரு மைல் தூரம் குறுக்குப் பாதையில் போக வேண்டும். செங்கோடன் அங்கே தன் வண்டியைப் பிரித்து ஓட்டிக்கொண்டு போய்ச் சேவல் பாளையம் சின்னசாமிக் கவுண்டர் வீட்டில் மருடபதியை விட்டான். சின்னசாமிக் கவுண்டர் காலமாகிக் கொஞ்ச காலம் ஆயிற்று. செங்கோடனுடைய மாமியாரும், கல்யாணமாகாத ஒரு மைத்துனியும் இரண்டு மைத்துனர்களும்தான் இருந்தார்கள். மைத்துனர்கள் சிறு பிள்ளைகள். அவர்கள் காங்கிரஸ் தொண்டன் மருடபதியைப் பற்றி ரொம்பவும் கேள்விப்பட்டிருந்தார்கள். மருடபதிக்கு அந்த வீட்டில் ராஜோபசாரம் நடந்தது.

செங்கோடன் வண்டியுடன் கோயமுத்தூருக்குக் கிளம்பியபோது, மருடபதி, அவனிடம், ''அண்ணாச்சி! கோயமுத்தூரில் எனக்கு அவசியம் ஒரு காரியம் ஆகவேண்டும். உன்னால் முடியக்கூடிய காரியம்தான். செய்து வருவாயா?'' என்று கேட்டான். ''ஆகட்டும்; என்ன காரியம்?'' என்றான் செங்கோடன்.

''பிரமாதம் ஒன்றுமில்லை. பென்ஷன் ஸப்-ஜட்ஜ் அய்யாசாமி முதலியார் வீடு எங்கே இருக்கிறதென்று விசாரித்து அடையாளம் தெரிந்து கொண்டு வர வேண்டும். அவரிடம் ஒரு முக்கியமான காரியம் எனக்கு இருக்கிறது. அதை முடித்துக் கொண்டு பிறகு ஊருக்கு வந்து விடுகிறேன்'' என்றான் மருடபதி. ''சரி'' என்று சொல்லி விட்டுச் செங்கோடன் போனான்.

மருடபதி அன்று முழுவதும் ஓய்வு எடுத்துக் கொண்டு இளைப்பாறினான். எப்படியோ அந்த வீட்டில் அவன் என்றும் அறியாத ஒரு மன அமைதியை அனுபவித்தான். வீட்டுப் பிள்ளைகள் இரண்டு பேரும் மருடபதியிடம் கலகலவென்று பேசிக் கொண்டும், காங்கிர



சையும், காந்தியையும், சிறை வாசத்தையும் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அடிக்கடி அவர்கள், 'மகாத்மா காந்திக்கு ஜே!', 'பாரத மாதாவுக்கு ஜே!' 'மருடபதிக்கு ஜே!' என்று கோஷித்து விட்டுப் புன்னகையுடன் மருடபதியைக் கடைக் கண்ணால் பார்த்தார்கள். அவர்களுடைய அக்காவுக்குப் பதினேழு, பதினெட்டு வயதிருக்கும். படிப்பில்லாத பட்டிக்காட்டுப் பெண்தான். ஆனால் முகத்தில் நல்ல குறுகுறுப்பு இருந்தது. அவள் கருகருப்பாக அங்கு மிங்கும் ஓடியாடி வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள். இடையிடையே மருடபதியின் பேரில் ஒரு கடைக் கண் பார்வையை மின் வெட்டைப் போல் வீசி விட்டுப் போனாள். இந்த மாதிரி ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு, சிவனே என்று அமைதியான கிராம வாழ்க்கை ஏன் நடத்தக் கூடாது என்று மருடபதி எண்ணினான்.

செங்கோடனுடைய மாமியாருடன் அவன் பேசிக் கொண்டிருந்தபோது இறந்து போன பாவாயியைப் பற்றியும், அவளுக்குக் கள்ளிப்பட்டிக் கவுண்டருடன் நடந்த கல்யாணத்தைப் பற்றியும், அவர்களுடைய இல்வாழ்க்கையைப் பற்றியும் பல விவரங்கள் அறிந்தான். பாவாயி தான் அந்த வீட்டின் மூத்த பெண். கள்ளிப்பட்டிக் கவுண்



டரின் முதல் மனைவிக்குக் குழந்தைகள் இல்லையாதலால் பாவாயியை இரண்டாந் தாரமாகக் கொடுத்தார்கள். பாவாயிக்கு ஆண் குழந்தை பிறந்தால் கள்ளிப்பட்டிக் கவுண்டருடைய பெரிய சொத்து முழுவதும் இந்தக் குழந்தைக்கு வரும் என்று ஆசைப்பட்டுக் கொடுத்தார்கள். பாவாயிக்கு அவ்விதமே ஆண் குழந்தையும் பிறந்தது. ஆனாலும் அதற்குப் பிறகு கள்ளிப்பட்டிக் கவுண்டர் மூன்றாந் தாரம் கல்யாணம் செய்து கொண்டார்.

பாவாயியின் பிள்ளைக்கு மூன்று வயதானபோது பாவாயி இரண்டாவது பிரசவத்துக்காகப் பிறந்த வீட்டுக்கு வந்திருந்தாள். கள்ளிப்பட்டிக் கவுண்டருக்கு அவள் மேல் எப்படியோ வெறுப்பு உண்டாகி, அவளை அடித்து உபத்திரவப்படுத்த ஆரம்பித்தார். இதனால்தானோ என்னவோ பாவாயிக்கு அகாலப் பிரசவமாகிக் குறைப் பிள்ளையாய்ப் பிறந்து தாயாரும் இறந்து போனாள். அதே சமயத்தில் அவளுடைய நாலு வயதுப் பிள்ளையும் காணாமல் போய்விட்டது.

கள்ளிப் பட்டிக் கவுண்டருக்குப் பாவாயி இறந்ததில் துக்கம் இல்லை. ஆனால் பிள்ளை காணாமல் போனது பற்றி அவருக்குத் துக்கமும் கோபமும் அசாத்தியமா யிருந்தன. பாவாயியுடன் அவர் துணைக்கு அனுப்பி யிருந்த வேலைக்காரப் பெரியண்ணன் மேலும் அவருடைய சகலன் செங்கோடக் கவுண்டன் மேலும் அவருக்குச் சந்தேகம் உதித்தது. அவருடைய கோபத்துக்குப் பயந்து பெரியண்ணன் கண்டிக்கு ஓடிப் போய் விட்டான். செங்கோடக் கவுண்டன் அவரிடம் அகப்பட்டுக் கொண்டு உயிருடன் தப்பிய பாடு பெரும் பாடாகி விட்டது.

மகுடபதி இன்னும் கொஞ்சம் விசாரித்து, அப்போது கண்டிக்குத் தப்பி ஓடிய பெரியண்ணனே, தான் குடிப் பேயினிடமிருந்து தப்புவித்த பெரியண்ணன் என்பதைத் தெரிந்து கொண்டான். ''ஐயோ! பெரியண்ணனை மறுபடியும் காண்போமா?'' என்று அவனுடைய மனம் தத்தளித்தது.

அன்றிரவு செங்கோடன் கோயமுத்தூரிலிருந்து திரும்பி வந்தான். மாஜி ஸப்-ஜட்ஜ் அய்யாசாமி முதலியாரின் விலாசத்தைத் திட்டமாக விசாரித்துக் கொண்டு வந்து மகுடபதியிடம் தெரிவித்தான். ஓர் அநியாயக் கேஸ் சம்பந்தமாக மேற்படி அய்யாசாமி முதலியாரிடம் யோசனை கேட்க வேண்டியிருக்கிறதென்றும், அவரைக் கண்டு பேசிவிட்டு உடனே வேங்கைப்பட்டிக்கு வந்துவிடுவதாகவும் மகுடபதி செங்கோடனிடம் கூறி, வேங்கைப்பட்டியில் தன் தாயாரைப் பார்த்து அவ்விதம் தெரிவிக்கும்படியும் கேட்டுக் கொண்டான். மறுநாள் காலையில் செங்கோடன் தன்னுடைய கிராமமான காட்டுப் பாளையத்துக்கும், மகுடபதி கோயமுத்தூருக்கும் கிளம்பினார்கள்.

மகுடபதி கோயமுத்தூருக்குக் கிளம்பியபோதும், அன்று பிற்பகல் அய்யாசாமி முதலியார் வீட்டு வாசலை அடைந்தபோதும் கூட, தான் இன்னான் என்பதைச் சொல்லிச் செந்திருவைப் பற்றி விசாரிக்கும் எண்ணத்துடன்தான் வந்தான். ஆனால், செவிமந்தமுள்ள முதலியாரின் மனைவி, ''தவிசுப் பிள்ளையா?'' என்று கேட்டபோது, அம்மாதிரி தவிசுப்பிள்ளையாக நடித்தால் ஒரு வேளை சீக்கிரத்தில் உண்மை தெரியலாம் என்ற யோசனை மகுடபதிக்கு உண்டாயிற்று. காங்கிரஸ் விடுதிகளில் மகுடபதி சமையல் வேலையும் நன்றாய்க் கற்றுக்கொண்டிருந்தான். ஆகவே பங்கஜத்தின் தாயாருக்குச் சந்தேகம் தோன்றாதபடி அவனால் சமையல் அறையில் வேலை செய்ய முடிந்தது.

நள்ளிரவில், அய்யாசாமி முதலியார் பங்களாவின் முன்புறத்துக் கொடி வீட்டில் உட்கார்ந்து கொண்டு, மகுடபதி மேற்கூறிய வரலாறுகளைச் சுருக்கமாக பங்கஜத்திடம் தெரிவித்தான். அவன் சொல்லா விட்டால் பங்கஜம் விடுகிற வழியா யில்லை. நாவல் பைத்தியம் முற்றியவளான பங்கஜம், நிஜ வாழ்க்கையில் நடக்கும் இவ்வளவு அபூர்வ சம்பவங்களைத் தெரிந்து கொள்ளாமல் விட முடியுமா? ஆகவே மகுடபதி எதையாவது விட்டால் கூடப் பங்கஜம் நோண்டிக் கேட்டு விஷயங்களைத் தெரிந்து கொண்டாள்.

கடைசியாக மகுடபதி, ''இவ்வளவெல்லாம் நான் சிரமப்பட்டதில் என்ன பிரயோஜனம்? ஒன்றுமில்லை. நாளைக்கே நான் மறுபடியும் பகிரங்கமாக மறியல் செய்து ஜெயிலுக்குப் போய் விடுகிறேன்'' என்றான்.

உடனே, அவன், ''இல்லை, இல்லை. மறியலும் ஆச்சு, மண்ணாங்கட்டியுமாச்சு! இந்தக் கைத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு போய் அந்தக் கார்க்கோடக் கவுண்டரைச் சுட்டுக் கொன்றுவிட்டு, போலீஸாரிடம் நேரே போய் ஒப்புக் கொண்டு விடுகிறேன்'' என்றான்.

''பைத்தியந்தான்!'' என்றாள் பங்கஜம்.

''யாரைச் சொல்கிறாய்?''

''ஆமாம்; பைத்தியம் உமக்குத்தான் என் தோழிக்கு இல்லை.''

''அதெப்படிச் சொல்கிறாய்? உனக்கு என்னமாய்த் தெரியும்?''

''சொல்கிறேன், கேளும். மூன்று வருஷங்களுக்கு முன்னால் நானும் செந்

திருவும் மயிலாப்பூரில் அடுத்தடுத்த வீட்டில் இருந்தோம். அப்போது நான் ஒரு கதை எழுதினேன். அதில் கதாநாயகி ஒரு துஷ்டனிடம் அகப்பட்டுக் கொண்டு விடுகிறாள். 'என்னைக் கல்யாணம் செய்துகொள்' என்று அந்தத் துஷ்டன் வற்புறுத்துகிறான். மனோன்மணி — கதாநாயகி — மாட்டேன் என்கிறாள். அவனுடைய பலவந்தத்திலிருந்து அவள் எப்படித் தப்புவது? இதற்கு ஏதாவது யுக்தி கண்டுபிடிப்பதற்கு நான் யோசித்தேன். எவ்வளவோ யோசித்தும் யுக்தி ஒன்றும் தோன்றவில்லை. செந்திருவிடம் கேட்டேன். அவள் உடனே 'மனோன்மணிக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாக வையேன்' என்றாள். 'அடி சுட்டி! பேஷான யோசனையடி' என்றேன். அன்று செந்திரு என் கதைக்குக் கூறிய யுக்தி இப்போது அவளுக்கு நிஜமாகவே உபயோகப்பட்டிருக்கிறது. அதை ஞாபகப்படுத்திக் கொண்டுதான் என் சமர்த்துத் தோழி இப்போது பைத்தியம் போல் நடித்திருக்கிறாள்....''

''இது மட்டும் நிஜமாயிருந்தால்...'' என்றான் மகுடபதி அளவற்ற ஆவலுடன்.

''சந்தேகமே இல்லை. என் மனசு சொல்கிறது, என் தோழிக்கு நிஜப் பைத்தியம் இல்லையென்று. அப்பா சொல்லும்போதே எனக்கு இது தோன்றிவிட்டது. ஆனால் அவரிடம் சொல்லிப் பிரயோசனமில்லையென்று நான் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தேன். செந்திருவின் சமர்த்தே சமர்த்து. ஆனைப்பட்ட கார்க்கோடக் கவுண்டரையும், போலீஸ் சூபரிண்டெண்டையும், என் அப்பாவையும் கூடத் தனக்குப் பைத்தியம்தான் என்று நம்பும்படி நடித்திருக்கிறாளே? — அந்தக் கெட்டிக்காரியை எப்படியாவது விடுதலை செய்ய வேண்டியது நம்முடைய பொறுப்பு'' என்றாள் பங்கஜம்.

''உன்னையும் பொறுப்பில் சேர்த்துக் கொண்டதற்காக ரொம்ப சந்தோஷம்'' என்றான் மகுடபதி.

''உம்மிடம் ஏதாவது பணம் இருக்கிறதா?'' என்று பங்கஜம் கேட்டாள்.

''காலணாக்கூட இல்லை. வேங்கைப் பட்டிக்குப் போய் எடுத்துக் கொள்ள வேண்டும்.''

''சற்றுப் பொறும்'' என்று சொல்லி விட்டுப் பங்கஜம் வீட்டுக்குள்ளே சென்றாள். ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் திரும்பி வந்து மகுடபதியின் கையில் சில பத்து ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்தாள்.

'உடனே, இப்போதே, கிளம்பும். பொழுது விடிந்து இங்கே இருந்தால், அப்பா பார்த்துவிடுவார். அம்மாவை ஏமாற்றியது போல் அவரை ஏமாற்ற முடியாது. அவர் தெரிந்து கொண்டால் ஏதாவது அனர்த்தமாய் முடிந்தாலும் முடியும்.''

''போகிறேன். போய் என்னத்தைச் செய்வது?''

''என்னத்தைச் செய்வதா? போய் மூன்று வேளையும் சாப்பிட்டு விட்டுச் சௌக்கியமாய்ப் படுத்துத் தூங்குவது. ஓர் அனாதைப் பெண் எந்தக் கதியடைந்தால் உமக்கு என்ன?''

''அவளுக்காக என் உயிரைக் கொடுக்கவும் தயாராய் இருக்கிறேன். ஆனால் என்ன செய்கிறது என்றுதான் தெரியவில்லை.''

''சரி, நான் சொல்லிக் கொடுக்கிறேன். இந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு போய்த் தேவகிரி எஸ்டேட்டுக்குப் பக்கத்தில் ஓர் ஊரில் இருந்து கொள்கிறது: எஸ்டேட் பங்களாவில் உள்ள வேலைக்காரர்களை எப்படியாவது சிநேகம் செய்துகொள்கிறது; அவர்கள் மூலமாய்ச் சொல்லியனுப்பியோ, கடிதம் அனுப்பியோ செந்திருவிடமிருந்து 'எனக்குப் பைத்தியம் இல்லை' என்று ஒரு கடிதம் மட்டும் எப்படியாவது வாங்கிக் கொண்டு வந்து விடும். அப்புறம் அவளை மீட்டுக் கொண்டு வருவதற்கு நானாயிற்று'' என்றாள் பங்கஜம்.

மகுடபதி அவளுக்கு நன்றியும் வந்தனமும் கூறத் தொடங்கினான். ''அதெல்லாம் வேண்டாம்; சீக்கிரம் போம். அப்பாவின் அறையில் ஏதோ சத்தம் கேட்டது. அவர் ஒரு வேளை விழித்துக் கொண்டு வந்து விட்டால் ஆபத்து!'' என்று சொல்லிப் பங்கஜம் விரைவாகப் பங்களாவுக்குள் சென்றாள். அடுத்த நிமிஷம் பங்களாவில் நிசப்தம் குடிகொண்டது.

மகுடபதி, ''இதெல்லாம் கனவா? உண்மையில் நமது வாழ்க்கையில் நடப்பதுதானா?'' என்ற திகைப்புடன் அங்கிருந்து எழுந்திருந்து வெளியே செல்லத் தொடங்கினான். இந்த அர்த்த ராத்திரியில் எங்கே போவது, என்ன செய்வது என்று யோசிக்கக் கூட அவன் மனம் அப்போது சக்தி இழந்திருந்தது. உணர்வில்லாத இயந்திரம் போல் நடந்து சப்தம் செய்யாமல் காம்பவுண்ட் கேட்டின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். வெளியே வந்து திரும்பியதும், சுவரோரத்தில், அவனுக்கெதிரே தோன்றிய தோற்றத்தைக் கண்டு, அப்படியே வெட-வெடத்து நின்றான். அந்தக் கணத்தில் அவனுடைய உடம்பில் ஓடிய இரத்தமெல்லாம் சுண்டி வறண்டு விட்டது. அப்படி அவனை வெட வெடத்து நடுங்கச் செய்த தோற்றம், அங்கே சுவரோரமாக நின்ற பெரியண்ணனுடைய ஆவி வடிவம்தான்! (தொடரும்)

# மூலமாகிய வேதம்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராச்சார்ய சுவாமிகள்

நம்முடைய மதம் என்பது சைவம், வைஷ்ணவம் என்று இரண்டு பெரிய பிரிவுகளாக இருக்கின்றது: 'இதை இரண்டு மதம் என்று சொல்வதா! ஒரே மதந்தான் என்று சொல்வதா?' என்று சந்தேகம் வரும்.

கிறிஸ்துவ மதத்திலும் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. இருந்தாலும் ஒரே மதம் என்று சொல்கிறார்கள். காரணம் என்ன? இரண்டு பேரும் சமமாகப் பூஜை செய்ய ஒரே கர்த்தரின் பெயரைச் சொல்லி வணங்குகிறார்கள். புத்த மதத்தில் ஹீனயானம், மஹாயானம் என்று இரண்டு பிரிவுகள் இருந்தாலும் இரண்டையும் இரண்டு மதமாகச் சொல்வதில்லை; காரணம் அவர்கள் இரண்டு பேருக்கும் புத்தரே தலைவர்.

அப்படிச் சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் ஒரே ஸ்வாமி இருக்கிறாரா? இல்லை.



இப்போது சாதாரண வைஷ்ணவர்கள் எப்படி இருந்தாலும் அவர்களுக்கு ஆசாரிய புருஷர்களாக இருப்பவர்கள் சிவன் கோயில் பக்கமே வரமாட்டார்கள். விஷ்ணுதான் அவர்களுக்கு ஸ்வாமி. அவர்களுக்குச் சிவன் ஸ்வாமியே அல்ல. விஷ்ணுவினுடைய பக்தர்கள் அநேகருக்குச் சிவன் ஒரு பக்தன்தான் என்பது அபிப்பிராயம். சைவர்களிலும் தீவிரவாதிகள், 'விஷ்ணு ஸ்வாமியே அல்ல. சிவன்தான் ஸ்வாமி. விஷ்ணு அவனுக்கு அடியான்' என்று கொள்கிறார்கள். இவர்கள் இரண்டு பேரையும் எப்படி ஒரு மதம் என்று சொல்வது?

'அது போகட்டும்; இவர்கள் இரண்டு பேரையும் ஒரு மதம் என்று சொல்ல இரண்டு பேருக்கும் பொதுவாக ஏதாவது ஒரு மதப் புஸ்தகம் இருக்கிறதா?' என்று கேட்கலாம். சைவர்கள் தேவாரம் முதலிய திருமுறைகளைத் தங்கள் மத நூல்களாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வைஷ்ணவர்களோ நாலாயிர திவ்வியப் பிரபந்தம் தமது ஆதார நூல் என்கிறார்கள். புஸ்தகங்களும் வேறாகப் போய் விட்டன; ஸ்வாமியும் வேறாகப் போய் விட்டார். அப்படி இருக்க இரண்டு பேரையும் ஒரே மதம் என்று எப்படிச் சொல்வது?

நமக்குள் சைவர்கள், வைஷ்ணவர்கள் என்று வேறாகச் சொல்லிக் கொண்டிருந்தாலும் வெள்ளைக்காரன் நமக்கு ஹிந்துக்கள் என்று பெயர் வைத்தானோ நாம் வாழ்ந்தோம். அவன் வைத்த பெயர் நம்மைக் காப்பாற்றியது.

அப்படியானால் நமக்கு ஒரு மதமா? இரண்டு மதமா? வைஷ்ணவர்களுக்கு ஸ்வாமி வேறே, புஸ்தகம் வேறே; சைவர்களுக்கு ஸ்வாமி வேறே, புஸ்தகம் வேறே என்று சொன்னாலும் உண்மை அப்படி அன்று. இப்போது இருக்கிறவர்களுடைய மனோபாவத்தைக் கவனித்தால் அது வேறு மதம் என்று சொல்லக்கூடிய ஸ்வபாவம் வளர்ந்திருக்கிறதே தவிர, அவர்களுடைய முதல் நூலைப் பார்த்தோமானால் உண்மை தெரிய வரும். சைவத் திருமுறைகள், நாலாயிரப் பிரபந்தம் என்கிற இரண்டையும் பாடினவர்களுடைய அபிப்பிராயத்தில் இது வேறு மதம், அது வேறு மதம் என்ற பேதம் இல்லை. அவர்கள் காலத்துக்கு முந்தியே ஒரு மதம் இருந்திருக்கிறது. ஆழ்வார்கள் பாடுவதற்கு முந்தி வைஷ்ணவ மதம் இருந்திருக்கிறது. நாயன்மார்களுக்கு முந்தியும் சைவ மதம் இருந்திருக்கிறது. இந்த மதங்களுக்கு முதல் நூல் எது என்று பார்த்தால் மறைகள்தாம்; அதாவது வேதங்களே. சைவர்கள் ஈசுவரனையே,

'வேதமோ டாறங்க மாயி னானை
வேதநாதன், வேதநேன், ஆரணன்காண்'

என அநேக இடங்களில் சொல்கிறார்கள். வைஷ்ணவ நூல்களிலும் இப்படித்தான், 'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லியிருப்பதை நாம் சரியாகக் கவனித்தால் இவ்விருவர்களுக்கும் மூலப் புஸ்தகம் ஒன்றே என்பது தெளிவாகும். இப்போது சைவ வைஷ்ணவர்களுக்கும் முக்கியமாக இருக்கிற தேவாரமும், பிரபந்தமும் அந்த மூலமான வேதத்தை ஆதாரமாகக் கொண்டு உண்டானவையே. இப்படியே நம்முடைய மதப் பிரிவுகள் எல்லாம் வேதத்திலிருந்தே வந்தவை. வேர் ஒன்று; கிளைகள் பல.

ஆராய்ந்து பார்த்தால், ஹிந்து மதப் பிரிவுகளுக்கு மட்டுமின்றி எல்லா மதத்துக்குமே மூலம் வேதம். அந்த மூலத்தை ரட்சிக்க வேண்டும்.



# அவர்கள்
# வறுமை நீங்கி
# வாழ்வு வளம் பெற

அதில் எங்களுக்கும் பொறுப்புண்டு.
பசியும் அறியாமையும் அவர்களது
வாழ்வோடு இணைந்தே இருந்தாலும்,
அவர்களுக்கு.... வறுமையிலிருந்து....
அறியாமையிலிருந்து....
நோயிலிருந்து.... உண்மையான
விடுதலை அளிப்பதே எங்கள்
பிரதான நோக்கம்.

BHEL-திருச்சி மின்சக்தி உற்பத்தியின் மூலம் அவர்களுடைய வறுமையை அகற்றவும், துன்பங்களைப் போக்கவும் நேரடியாக இம்மகத்தான மாபெரும் முயற்சியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுள்ளது.

வீடுகளுக்கும், மருத்துவ மனைகளுக்கும் மற்றும் துரிதமாக பெருகி வரும் தொழிற்சாலைகளுக்கும் வேண்டிய அனல் மின் சக்தியை உற்பத்தி செய்ய நாடெங்கிலும் நிறுவப்படும் பிரம்மாண்டமான அனல் மின் நிலையங்களுக்குத் தேவையான கனரகக் கொதி கலன்களை தயாரித்துக் கொடுக்கிறது.

விவசாயத் துறையை வளமாக்குவதற்குத் தேவைப்படும் உர, ரசாயனத் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய சிராவிக் கொதிகலன்களைத் தயாரித்துக் கொடுக்கிறது.

BHEL-திருச்சியும், ஹரித்துவார், ஹைதராபாத் ஆகிய இடங்களிலுள்ள தனது சகோதர நிறுவனங்களும் சேர்ந்து நாட்டின் முன்னேற்றம் நீடித்திருக்க மேன்மேலும் அதிகமாக மின்சக்தியை உற்பத்தி செய்ய உதவுகிறது.

வளமான எதிர்காலத்திற்கு இன்றியமையாத மின்சக்தியை இன்றே உற்பத்தி செய்வதில் BHEL-திருச்சி தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுகிறது.

## வளம் பெருக்கும் மின்சக்தி உற்பத்திப்பணியில்...

# BHEL

## பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்

(இந்திய அரசின் ஓர் நிறுவனம்)

யூனிட்: ஹை பிரஷர் பாய்லர் ப்ளான்ட், திருச்சிராப்பள்ளி-14

பதிவு அலுவலகம்:
5 பார்லிமெண்ட் தெரு, புது டெல்லி-1.

ASP/M/115

# சென்ட்ரல் பி.வி.ஆர்

கீழே இருக்கும் புகைப்படங்களில் இருப்பவர்கள் பிரசித்திபெற்ற ஜேப்படிக்காரர்கள். பணத்தை எடுக்கும்போதும் வைக்கும்போதும் ஜாக்கிரதையாக இருக்கும்படி பிரயாணிகள் கோரப்படுகிறார்கள். - செண்ட்ரல் ஸ்டேஷன் அறிவுரை

## அத்தியாயம் 2

பளபளக்கும் சைக்கிளை ரயில்வே போலீஸ் ஸ்டேஷன் வாயிலில் வைத்துப் பூட்டிவிட்டு ஒருவிதப் பெருமிதத்துடன் அதையே பார்த்து நின்ற மணி, கான்ஸ்டேபிள் ஏகாம்பரம் தன்னையே புன்முறுவலுடன் கவனிப்பதை உணரவில்லை. சைக்கிளுக்கு டைனமோ விளக்கு இருக்கிறது. சுகமாக உட்கார்ந்து போவதற்கு ஃபோம் குஷன் இருக்கிறது. அரை ஹார்ஸ் பவரில் ஒரு மோட்டாரும் பொருத்தி விட்டால், காலின் சக்திக்கு விரயமில்லாமல் பதினைந்து மைல் வேகத்தில் எங்கு வேண்டுமானாலும் போய் வரலாம். கார், ஸ்கூட்டர்களுக்கு இருப்பது போல் நம்பர் பிளேட்டும் இருக்கும்.

மணி கற்பனையில் திளைத்துப்போனான்.

''என்னப்பா, மணி! உனக்குள்ளேயே பேசிக் கொள்ளுகிறே?'' என்று ஏகாம்பரம் கேட்டான்.

விழிப்பு வந்தவனைப் போல் மணி ஏறிட்டுப் பார்த்தான். ஏகாம்பரத்தின் தலையில் அந்தப் பழுப்பேறின சிவப்புத் தொப்பி இல்லை. அதுவே ஒரு நல்ல சகுனமாகப் பட்டது. ஆனால் அடுத்த கணமே அவனுடைய கழுத்தில் கட்டியிருந்த அழுக்கேறிய கைக்குட்டை கண்ணை உறுத்தி, இது இன்றையத் தொழிலின் தோல்விக்கு அறிகுறியோ என்ற பயத்தை உண்டுபண்ணியது.

''என்ன நான் கேட்கிறேன், பதில் சொல்லாமல் இருக்கிறியே?''

''நான் எனக்குள்ளே பேசிக் கொள்ளவில்லே, ஏகாம்பரம்! குளிருபாரு, குளிர் அதிலே உதடு தந்தி அடிச்சுது.''

''அது கிடக்கட்டும் எனக்கு ஒரு டிக்கெட் வேணுமே. மச்சான் மீரட்டுக்குப் போறான். திடீர்னு ஆர்டர் வந்திருக்கு.''

''என்ன நீங்க ரயில்வே கான்ஸ்டபிள். என்கிட்டேயே டிக்கட் வாங்கிக் கொடுன்னு கேட்கிறிங்களே? வெட்கமாயில்லே?''

''வெட்கமாத்தான் இருக்கு. ஆனால் கிடைக்கலியே?''

''என்னிக்குப் போறான் உங்க மச்சான் மீரட்டுக்கு?''

''நாளன்னிக்கு.''

''எட்டு மணிக்கு டில்லி கவுண்டர்கிட்டே இருப்பேன்... வந்து பாருங்க!''

''சரி, மணி!''

''மணின்னு சொன்னாப் போறுது. 'மணி'யோட வா.''

சொல்லிவிட்டுக் காதலியை விட்டுப் பிரிய மனமில்லாமல் செல்லும் காதலனைப் போல் மணி சைக்கிளைக் கடைசித் தடவையாகப் பார்வையால் விழுங்கிவிட்டு ஸ்டேஷனுக்குள் புகுந்தான்.

அப்போது மணி சரியாக ஐந்து பத்து.

வாசலில் வந்து அப்போதுதான் ஒரு முக்காலியின் மேல் உட்கார்ந்த டிக்கட் பரிசோதகர் நாராயணராவ் மணி வருவதைப் பார்த்ததும் ஏதோ தம் எண்ணம் பூர்த்தியாகி விட்டதாகப் பூரித்துச் சிரித்தார்.

''மணி! இப்பத்தானப்பா உன்னைப் பத்தி நினைச்சேன். நீயே வந்துட்டே.''

''ராவ்ஜி, காலங்கார்த்தாலே ஒரு பொய்யுடன் உங்க வேலையை ஆரம்பிக்காதீங்க. என்னைப் பார்த்தப்புறம்தான் உங்களுக்கு என் ஞாபகமே வந்தது... என்ன வேண்டும்?''

''அதுதான் சொன்னேனே, போன வாரம்...''

''உங்க அக்கா பெண்ணுக்கு டைப்பிஸ்ட் வேலைதானே?''

''ஆமாம்ப்பா... அக்கா வீட்டுக்குத் திரும்பி வந்ததிலிருந்து என்னாலே ஒரு சம்பளத்திலே சமாளிக்க முடியலே... நீதான் அதற்கு ஒரு வழி பண்ணணும்.''

''கிம்பளம் வாங்குங்களேன். இருபது வருஷங்கள் வரை உத்தியோகம் பார்க்கிறேன்னு சொல்லிக் கொள்வதில் குறைச்சல் இல்லே... ஒரு ஆள்கிட்டே எட்டணா, ஒரு ரூபாய்னு வாங்கினா கூட உங்க எட்டு மணி வேலையில் பத்து ரூபாய் தேறுமே!''

''புதுசா ஒரு தொழிலைக் கத்துக்க சொல்றியா? வேணாம்ப்பா, வேணாம் நீ போ.''

''கவலைப்படாதீங்க, ராவ்ஜீ... இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை. பம்பாய் மெயிலைப் பார்க்கப் போயிண்டிருக்கேன் நாளை திங்கள்.. அப்புறம் செவ்வாய்.. புதன்கிழமை யன்னிக்கு உங்க அக்கா பெண்ணை அழைச்சுண்டு வரங்க. நாம எல்லோரும் போய்ப் பார்த்து ஏற்பாட்டைச் செய்யலாம்.''

''கையிலே ஒரு ரூபாய் இருக்குமா மணி... இரண்டு நாட்களிலே உனக்குத் திருப்பித் தரேன்.''

''கிம்பளம் வாங்குகிற ஆளா இருந்தால் பதினைந்தாம் தேதியே கடன் வாங்க ஆரம்பிச்சிருப்பீங்களா?''

சொல்லிக் கொண்டே ஷர்ட்டின் வலது கையின் மடிப்புக்களிலிருந்து பணத்தை எடுத்தான். ஒரு ரூபாயை அவரிடம் நீட்டினான்.

''உன் கிட்டேயே இரண்டு நோட்டுத் தானே இருக்கு?''

ராவ்ஜி 'வேண்டாம்' என்று சொல்வது போலப் பேசி, முகத்தில் ஓர் இரக்கத்தையும் இழுத்து வைத்து, கையையும் நீட்டினார்.

''என் கிட்டே இரண்டாயிரம் இருக்கும்னு ஒரு ரூபாய் கேட்டீங்களா?''

கொடுத்து விட்டு மணி நேரே ஏழாம் பிளாட்பாரத்தினுள் நுழைந்தான். விரைவாக நடந்த அவன் எந்தப் பக்கமும் பார்க்கவில்லை. வெள்ளை பாண்ட், வெள்ளை முழுக்கை ஷர்ட். முழுக் கையாக மடித்த மடிப்பே பார்ப்பதற்குக் கவர்ச்சியாக இருந்தது. காலில் கறுப்பு பூட்ஸ். ஊதா நிற சாக்ஸ் புதுமைப் பொலிவுடன் விளங்கியது. உருண்டு திரண்ட தோள் பட்டை, நடைக்கே ஒரு கம்பீரத்தை அளித்தது.

என்றும் வற்றாத ஜீவநதியைப் போல் அஸ்தமனமே ஆகாத புன்முறுவல் உதடுகளில் விளையாட அவன் வேகமாக நடந்தான்.

ஆர். எம். எஸ்.ஸை அடைந்ததும் அவன் நின்றான். ஏழாவது பிளாட்பாரத்தில் ஆள் அரவமே இல்லை. கூடூர் பாஸஞ்சர் ஆறு மணி ஐம்பத்தைந்து நிமிடங்களுக்குப் புறப்படும். அதில் போகிறவர்களில் பாதிப் பேர் சீசன் டிக்கட்காரர்கள். கால்வாசிப் பேர் ரயில்வே ஊழியர்கள். மீதியில் ராவ்ஜியைப் போன்ற உத்தமர்கள் சிலர்-டிக்கட்டுடன் பிரயாணம் செய்கிறவர்கள்.

ஆர். எம். எஸ்.ஸுக்கு முன்னே நின்றவன் அதிக நேரம் காத்துக்கொண்டிருக்கவில்லை.

'சித்தப்பா !''

ஒரு கிழவர் பெரிய ஜாதிக்காய்ப் பெட்டியின் மேல் உட்கார்ந்து வெற்றிலையையும் பாக்கையும் சிறு உலக்கையால் இடித்துக் கொண்டிருந்தவர், ''இதோ வரேண்டா, மணி!'' என்று சொல்லி உரலையும் உலக்





கையையும் பக்கத்தில் வைத்து விட்டு இறங்கினார்.

''என்னாலே வர முடியாது. ஒரே சாமான்களாகக் கொட்டிக் கிடக்கு. ஜாக்கிரதையா நீங்க வாருங்கோ'' என்று மணி கத்தினான்.

கிழவர் இறங்கி வந்தார். முகத்தில் வெள்ளிப் பொடிகள் தூவினாற்போல் தாடி. வழுக்கைக்குக் கரை கட்டிய தலை மயிர் காதோரம் மண்டிக் கிடந்தது.

அவர் அருகே வந்ததும் பாண்ட் பாக்கெட்டிலிருந்து இரண்டு பத்து ரூபாய் நோட்டுகளை எடுத்தான் மணி.

''சித்தப்பா! உங்க பிள்ளை கிட்டேயிருந்து இந்த இரண்டு நோட்டுக்களைக் கறக்கறதுக்குள்ளே என் தாவு தீர்ந்துடுத்து. ஒண்ணும் தேதி வர்றதுக்கு என்ன கேடுன்னு கேட்டான். நீங்க ஜெனரல் ஆஸ்பத்திரியிலே மூணு நாள் கிடந்தீங்கன்னேன். எப்போ டிஸ்சார்ஜ் எப்படி இருக்கார்னு கூடக் கேட்கலே...இந்தாருங்கள். எனக்கு பாம்பே மெயிலைப் பார்க்கணும்...''

''நான் செத்தாக் கூட அவனுக்கு என்ன? அது சரி, நான் இங்கேதான் இருக்கேன்னு அவனுக்கோ, அவன் பெண்டாட்டிக்கோ தெரியுமா?''

''தெரியாது. நான் சொல்லலே. அடுத்த தடவை பணம் கேட்கப் போறபோது ஞாபகமாச் சொல்றேன்...''

''வேண்டாம். சொல்லாதே.''

''ஏன், உடனே டாக்ஸியோட வந்து உங்களை அழைச்சுண்டு போய் நடுக்கூடத்திலே உட்கார வைச்சுடுவானே? சித்தப்பா! நான் சொல்றேன்னு தப்பா நினைச்சுக்காதீர்கள். நீங்க ஏதாவது ஒரு குற்றத்தைப் பண்ணியிருக்கிறீர்கள் என்றால் அது அவனைப் பெத்தது தான்...நான் வரேன்.''

ஏழாவது பிளாட்பாரத்திலிருந்து விரைவாகத் திரும்பிய மணி, மூன்றாவது பிளாட்பாரத்தை நோக்கி நடந்தான். இன்னும் பம்பாய் மெயில் வரவில்லை என்று அவனுக்குத் தெரியும். இருந்தாலும் அவனுடைய தொழிலில் அவன் என்னதான் நிபுணனாக இருந்தாலும், ஜரூராகக் குறித்த நேரத்தில் குறித்த இடத்தில் இருக்க வேண்டும். குறித்த பிரயாணியை அணுக வேண்டும்.

நடக்கும்போது சித்தப்பாவையும் அவருடைய பிள்ளையையும் பற்றிச் சிந்தனை பிறந்தது. இந்தச் சித்தப்பாவை அவனுக்குக் கடந்த இரண்டு மாதங்களாகத்தான் தெரியும். ஒருநாள் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் ஸ்லீப்பர் பெட்டியில் அவர் ஏறினார். டில்லியில் அண்ணா பெண் இருக்கிறாளாம். ரொம்ப நல்லவளாம். 'சித்தப்பா, சித்தப்பா' என்று அவள் உயிரை விடுவாளாம். தம் அந்திய நாட்களை அவள் வீட்டில் கழித்து விடுவது என்று ஒரு முடிவுக்கு வந்து விட்டாராம்.

அவருடைய இந்த முடிவு ஸ்லீப்பர் கண்டக்டர் தாமஸுக்குப் பிடிக்கவில்லை. கீழே இறக்கி விட்டார். டில்லிக்குப் போனதும் பணம் கொடுத்து விடுவதாகச் சொன்னார். டில்லியில் இருக்கும் அண்ணா பெண் என்ன வேண்டுமானாலும் தருவாள் என்று சத்தியம் செய்து பார்த்தார். தாமஸ் அவரைக் கீழே இறக்கி விட்டார். பிளாட்பாரத்தில் நின்ற அவருடைய கண்கள் கனத்தன. துண்டால் துடைத்துக் கொண்டே ;சுற்றுமுற்றும் பார்த்தார்.

அந்தச் சமயத்தில்தான் மணி எதிர்ப்பட்டான். அவனுடைய உடையையும், நடையையும் பார்த்து ஒரு கணம் பயத்துடன் மயங்கின அவர் அவனுடைய புன்முறுவல் பூத்த முகத்தைப் பார்த்து அடுத்த கணமே தைரியத்துடன் அணுகினார்.

''சார்...''

''என்ன பெரியவரே?''

''நான் டில்லிக்குப் போகணும்.''

''இதோ நிற்கிறதே. இதுதான் டில்லி ரயில். ஏறுங்கள்.''



''ஏறினேன். கீழே இறக்கி விட்டு விட்டான் ஒரு மகானுபாவன்!''

''ஸ்லீப்பரில் ஏறியிருப்பீர்கள். ரிஸர்வேஷன் இல்லையா?''

''டிக்கட்டே இல்லே...''

''போச்சுடா. டிக்கட்டே இல்லியா?'' வியப்புடன் பார்த்தான் மணி.

''அண்ணு பெண் டில்லியிலே இருக்கிருள். ராமகிருஷ்ணு நகரில் வீடு. மாப்பிள்ளைக்கு செக்ரடேரியட்டில் என்ணூறு ரூபாய் சம்பளம். ஒரு 'உம்' கொட்டினுல், ஜானகி ஏர்கண்டிஷனுக்கே பணம் அனுப்புவாள், அவ்வளவு நல்ல பெண்.''

''கடிதாசு எழுதிப் போடுங்கள். பணம் வந்ததும் போகலாம்.''

''அதுவரையில் என் கதி?''

''இந்த ஊரில் யாரும் இல்லியா?''

''கொள்ளி போடறதுக்கு ஒரு பிள்ளை இருக்கான். ஆனுல் அவன் என் வயத்துக்குப் போட மாட்டேன் என்கிருன்... அவன் மனைவிக்கு அடக்க ஒடுக்கம் போருதுன்னேன். நான் சொன்னதில் தப்பு இல்லே. அடக்கம் போருதுதான். எப்போ பார்த்தாலும் வாசலிலேயே தான் ஜாகையும் பார்வையும். இதைச் சொல்லப்படாதோ? சொன்னேன்... இந்த மாதிரி அடிக்கடி சொன்னேன். அவள் நேத்திக்கு ராத்திரி ஒரு நாடகம் ஆடினுள். ஏற்கனவே என் பிள்ளைக்கு நான் லட்சியம் இல்லே. 'ஒண்ணு நான் இருக்கணும் அல்லது உங்க அப்பா இருக்கணும்' என்று அவள் கைகேயி மாதிரி தலையை விரிச்சுண்டு, தரையிலே உருண்டாள். திரௌபதி மாதிரி தலைமயிர் அவளுக்கு. அந்த நீளத்தை வைச்சுண்டு அதிலேயே சீதை மாதிரி தற்கொலே பண்ணிக் கொள்ள முடிவு பண்ணி விடுவாளோ என்று என் பிள்ளைக்குப் பயம். நாடகம் முடிஞ்சுது. நானும் வெளியே வந்துட்டேன்.''

''நீங்க ராமாயணம் பாரதம் அளவுக்கு மீறிக் கேட்டிருக்கிறீர்கள். ராமன் மேலே தசரதனுக்கு எத்தனை ஆசை... அது மாதிரி இருந்திருக்கணும்.''

''இருந்தேன். தசரதனை விட அதிகமாகவே இருந்தேன். ஆனுல் அவன் சம்பாதிக்க ஆரம்பிச்சான். என் மனைவி செத்தாள். அவனுக்கு ஒரு மனைவி வந்தாள். மனைவி போனுல்தான் மனுஷன் மாறணும். வந்தால் மாறணுமா? அவன் மாறினுன். அதிலே யார் மாட்டிண்டா? இதோ நான்! என் கதியைப் பாருங்கோ! என் பிள்ளை அவள்தான் எல்லாம்னு இருக்கான். இன்னிக்குத் தெரியாது... அவள் தாடகி, பூதனை. சூர்ப்பனகை.

''நான் நேத்துச் சாயங்காலம் சாப்பிட்டது. கையில் காலணு இல்லே...''

''எங்கிட்ட இருக்கு. சாப்பிடுங்கள்.''

அன்று ஆரம்பித்த பரிச்சயம் இன்று வரை தொடர்ந்து வளர்ந்து விட்டது. பெரியவரின் பெயர் சாமிநாதன். அண்ணு பெண் ஜானகியின் பெயரைத் தினம் ஆயிரம் தடவைகள் உச்சரித்த அவரை அவள் கூப்பிடுவது போல் 'சித்தப்பா' என்று அழைக்க ஆரம்பித்தான் மணி. அவர் மீது அவனுக்கு இரக்கம் என்று தனியாக ஓர் உணர்ச்சி பிறக்கவில்லே. இந்த சென்ட்ரல் ஸ்டேஷன் என்கிற மகா யந்திரத்தில் இவரும் புகுந்து விட்டார். அது



# அத்தியாயம் இருபத்திரண்டு

கந்தசாமி அவர்களின் சவ அடக்கம் எவ்வித ஆரவாரமும் இன்றி ஆனால் முறைப்படி நடந்தது. தாத்தா தர்மலிங்கம் இறந்த இரு தினங்களுக்குள்ளேயே திடீரென்று நிகழ்ந்து விட்டது, இந்தப் பேரிழப்பு. ஆகவே, எல்லோர் மனத்திலும் தாங்க முடியாத வேதனை, முகங்களில் சோகம். பண்ணையே பொலிவிழந்து கிடந்தது. 'புயல் வீசிப் பண்ணையில் சேதம் விளைவித்ததிலிருந்தே எதுவும் சரியாக இல்லை. எல்லாமே கோளாறாக இருக்கின்றன. இது எதில் போய் முடியுமோ தெரியவில்லை' என்று பண்ணையாட்கள் பேசிக் கொண்டார்கள். அந்தப் பண்ணையில் வேலை பார்க்கும் அத்தனை பேரும் பழங்காலத்து மனிதர்கள். ஒரு சோக நிகழ்ச்சிக்குப் பிறகு அடுத்தடுத்துப் பல துர்ச் சம்பவங்கள் நிகழ்ந்தால் அவைகளைக் கொண்டு 'இவையெல்லாம் நல்லதுக்கல்ல, ஏதோ கெடுதலுக்குத்தான்' என்று எண்ணிப் பயப்படும் அப்பாவிகள்.

கோகிலா எத்தனையோ திறமையாகத் தன் கணவனுக்கு ஏற்பட்டுள்ள பரிதாபமான நோயையும், அதற்கு அளித்து வரும் சிகிச்சைகளையும் வெளியில் தெரியாமல் கட்டிக் காத்து வந்தாள். பண்ணை காரியஸ்தன் மறைவு, பாலுவின் மரணம், நிர்மலா காணாமல் போனது ஆகியவைகளையெல்லாம்கூட ரொம்ப சாமர்த்தியமாக, அதைப் பற்றி அதிகம் பேச்சுக்கு இடமில்லாமல் சமாளித்து வந்தாலும் ஊர் வாயை மூட முடியுமா? பண்ணையின் விவகாரங்கள் கொஞ்சங் கொஞ்சமாக வெளியில் வரத்தான் செய்தன. நாலு பேர் கூடும் இடங்களில் பேச்சுக்கு இலக்கான விஷயம் பண்ணை விவகாரமாகத்தான் இருந்தது.

சாதாரணமாக இருந்தால் தர்மலிங்கம் இறந்ததையே அந்த வட்டாரத்தில் பெரிய தடபுடல்படுத்தியிருப்பார்கள். அப்படி அது ஒரு கலியாணச் சாவு. அத்தனைக்குச் செல்வாக்குப் பெற்றவர் பெரியவர். ஏதோ சாபக்கேட்டைப் போல் தந்தையும் மகனும் அடுத்தடுத்து இறந்தது ஊர்க்காரர்களின் உள்ளத்திலே ஒரு திகிலை ஏற்படுத்தி விட்டது. கந்தசாமியின் கடைசி நேரச் சடங்கில் அதிகக் கூட்டமே இல்லை. சவ அடக்கத்தில் சேகரும் கோபாலும் கலந்து கொண்டார்கள். இரு தினங்களுக்கு முன்புதான் இப்படியொரு நிகழ்ச்சியில் பார்வையாளனாக இருந்தது சேகருக்கு நினைவு வந்து, மனத்தை என்னவோ செய்தது. வேலப்பன் அன்று இன்னொரு குழியை வெட்டியதற்கு ஏதோ காரணம் கூறினாலும் இன்று அதை அலட்சியமாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. 'எதிர்பார்த்தே இப்படி ஒரு குழியை அவன் தோண்டி இருப்பானோ?' இந்த எண்ணங்களின் குத்தலில் சேகர் குழிக்கு அருகே சென்று பார்த்தான். அடியில் உப்பைக் கொட்டியிருந்தார்கள். அதன் மீது மலர் தூவி இருந்தது, கந்தசாமியின் உடலைக் கிடத்த.

வேலப்பன் அப்பாவிதானா? இறந்த ஒருவருக்குக் குழி வெட்டும் நேரத்தில் உயிரோடிருப்பவருக்கும் — அவர் நோய் வாய்ப்பட்டிருப்பவரானாலும்கூட — ஒரு குழி வெட்டுவது நேரத்தை மிச்சப்படுத்தும் செயல்தானா? இப்போது சேகரால் அதை அப்படி எடுத்துக் கொள்ள முடியவில்லை. அவன் இன்னொரு சவக் குழி





# காற்று

**கௌசிகன்**

யைத் தோண்டியது இயற்கையானது தானா? அவனாக அதைச் செய்தானா? வேறு யாருடைய கட்டளைப்படியாவது நடந்து கொண்டானா? - இப்படிப் பல வினாக்களை எழுப்பி விடைகாண முயன்ற படியே பங்களாவுக்குத் திரும்பினான் சேகர்.

பிற்பகல் நேரம்.... மாலை நான்கு மணி இருக்கும்.

ஈமச் சடங்குக்கு வந்திருந்தவர்கள் ஒவ்வொருவராக விடைபெற்றுக் கொண்டு போகலானார்கள். குடும்ப டாக்டர் ஈசுவரனும் விடை பெற்றுக் கொண்டார். கோகிலாவின் சகோதரனான டாக்டர் ரகுநாத்தும் கிளம்பிவிட்டார். அவர் கடமை முடிந்து விட்டது. இனி அங்கு கட்டிக் காக்க, அமைதியை நிலைநாட்டுவதாகக் கூறி ஆர்ப்பாட்டம் செய்ய யாருமில்லையே! டாக்டர் ரகுநாத்தை அடுத்துத் தன் கைப் பெட்டி, பை சகிதம் வந்தாள் நர்ஸ் மோகனா.

"நீ இங்கிருந்தது எனக்கு எத்தனையோ உதவியாக இருந்தது

மோகனா'' என்றான். கோகிலா அவ னுக்கு விடை கொடுக்கும் வாயிலாக. ''நீ முன்பு சொன்னாயே, வடக்கே எங்கேயோ போகப் போவதாக. அதன் படித்தானே செய்யப் போகிறாய்?'' என்று கேட்டாள் தொடர்ந்து.

''ஆமாம், அப்படித்தான் உத்தேசம். ஆனால் இரண்டு நாள் சாமுண்டிக் கோட்டையில் தங்கி விட்டுத்தான் கிளம்பப் போகிறேன்..... நான் வரட் டுமா? எல்லாருக்கும் வணக்கம்'' என்று ஒயிலாக நகர்ந்தாள் மோகனா. கோபால் பேச்சற்ற நிலையில் அவள் வடிவத்தையே பார்த்துக் கொண்டு வசி யத்தில் கட்டுண்டவனைப் போல் உட் கார்ந்திருந்தான்.

அநேகமாக எல்லாரும் போய்விட் டார்கள் — வக்கீல் நீலமேகத்தைத் தவிர. அவர் மட்டும் அங்கு நாற் காலியில் காத்திருந்தார். அவர் கையி லிருந்த சிறு பெட்டி உணர்த்திக் கொண்டிருந்தது. மற்றோர் உயிலைப் படித்துக் கந்தசாமியின் மறைவுக்குப் பிறகு ஏற்பட்டுள்ள நிலைமையை உரிய வர்களுக்கு விளக்கி விடுவது அவ ருடைய கடமைகளில் ஒன்றாயிற்றே. ஆகவே, அதற்கான சூழ்நிலைக்காகக் காத்திருந்தார் அவர். இதைப் புரிந்து கொண்ட சேகர் அந்தச் சூழலிலிருந்து சற்றே ஒதுங்கியிருக்க எண்ணியவனாக டெலிபோனை நோக்கி நகர்ந்தான். அதன் அருகேயே இருந்த டைரக்டரி யைப் புரட்டி, துப்பறியும் துரைசாமி யின் வீட்டு நம்பரைத் தேடிக் கண்டு பிடித்தவன் அடுத்த நிமிஷம் அந்த எண் ணுக்கு டயல் செய்தான்.

''மிஸ்டர் துரைசாமியா? வணக்கம். ஒன்றுமில்லை......'' குரலைத் தாழ்த் தியவாறு கூறினான் சேகர், தன் பேச்சு கோகிலாவின் காதில் விழாதவாறு. ''நர்ஸ் மோகனா இப்போதுதான் கிளம்பி னாள் இங்கிருந்து. சாமுண்டிக் கோட்டை யில் தங்கிவிட்டு இன்று இரவோ நாளைக் காலையிலோ வெளியூர் கிளம்பப் போவ தாகத் தெரிகிறது. சாமுண்டிக் கோட்டையில் அவள் எங்கு தங்கு கிறாள், யாருடன் என்பதை எனக்காகக் கண்காணித்துச் சொல்ல முடியுமா?''

''முடியும்.... இது ஒரு பெரிய விஷய மல்ல. மறுபடியும் உங்களுக்கு நான் போன் செய்கிறேன்.....'' டெலிபோ வின் மறுபக்கத்திலிருந்து குரல் கொடுத் தார் துரைசாமி.

''செய்யுங்கள், மிஸ்டர் துரைசாமி. தாங்க் யூ வெரி மச்.'' டெலிபோனை அதன் இடத்தில் வைத்து விட்டுக் கூடத் துப் பக்கம் திரும்பினான். அங்கே நீல மேகம், மஞ்சுளா, கோபால், கோகிலா, லலிதா ஆகியோர் மட்டுமே அமர்ந் திருந்தார்கள். வேலைக்காரர்களைக்கூட அனுப்பி விட்டிருந்தாள் கோகிலா. சேகர் மெல்ல அந்த வட்டத்தில் கலந்து கொள்ளத் தனக்கெனக் காலி யாக இருந்த நாற்காலியில் போய் உட் கார்ந்து கொண்டான்.

நீலமேகம் கனத்த குரலில் சொல்லிக் கொண்டிருந்தார்: ''இவ்வளவு விரை வில் இன்னொரு துக்க நிகழ்ச்சி இந்தக் குடும்பத்தில் நிகழும் என்று நான் நினைக் கவே இல்லை. இச்செயல் என் கடமை களையும் பொறுப்புக்களையும் அதிக மாக்குகிறது. நாம் இங்கே கூடி இருப் பது கந்தசாமி அவர்களின் உயிலைப் பற் றித் தெரிந்து கொள்ளுவதற்காகத்தான். அவரை இழந்து நிற்கும் உங்களை அதிக நேரம் தாமதிக்கச் செய்ய விரும்ப வில்லை...'' பிறகு தம் பெட்டியிலிருந்து உயிலை எடுத்துப் பிரிக்கலானார்.

''கந்தசாமி அவர்கள் தயாரித்த உயில் இது. இதன்படி தகப்பனாருக்கு முன்னால் தாம் மரணமடைய நேரு மானால் தம்முடைய உடைமைகளை இரு பாகமாக்கி ஒன்றைத் தம் மனைவி கோகிலாவும் மற்றதை மகள் மஞ்சுளா வும் அடைய வேண்டியது என்று குறிப் பிட்டிருக்கிறார். அதன்படி அவருடை யது என்று கணக்கிட்டால், கந்தசாமி யின் சொத்துக்கள் பெரியவர் தர்மலிங் கத்தின் ஆஸ்தியோடு ஒப்பிடத்தக்கதே இல்லை. ஆறு லட்சம் கூடத் தேறாது. ஆனால் இப்படி அமுல் நடத்தும் ஒரு நிலை இப்போது இல்லை என்பதை நாமெல்லாரும் அறிவோம். கந்தசாமி யின் மரணம் தர்மலிங்கம் அவர்களின் மறைவுக்குப் பிறகுதான் நிகழ்ந்திருக் கிறது. அந்த நிலையில் சொத்துக்களை எப்படிப் பிரிப்பது என்பதைப் பற்றித் தான் முன்பே கூறியிருக்கிறேன். ஆகவே சிறு சிறு தொகைகளை ஒருசில ருக்குத் தர்மலிங்கம் ஒதுக்கியுள்ளபடி கொடுத்தது போக மற்றவை அவ்வள வும் — ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள் அத்தனையும் கந்தசாமி அவர் களையே சேருகிறது. அவருக்கு உரித் தானவைகளை அவரது மனைவியும் மக ளும் சமமாகப் பிரித்துக் கொள்ளு கிறார்கள்.....''

வழக்கறிஞருக்கே உரிய கற்றி வளைத் துப் பேசும் முறையினால் அலுப்படைந்த மஞ்சுளா நீலமேகம் அவர்களைப் பார்த்து, ''அதாவது முன்பு நீங்கள் குறிப்பிட்டபடி நான்கு கோடி மதிப் புள்ள இப்பண்ணையின் சொத்துக்களுக்கு நானும் சித்தியும் சம பாகஸ்தர்களா கிறோம். அவ்வளவுதானே வக்கீல் சார்?'' என்றாள்.

''ஆமாம், அதுவேதான்'' என்றார் வக்கீல்.

மஞ்சுளாவையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த கோகிலா, ''இது முறையான, நேர்மையான முடிவு தானே? இல்லையா மஞ்சுளா?'' என்றாள்.

''நான் மறுப்பு ஏதும் கூறவில்லையே'' என்றாள் மஞ்சுளா.

''மறுக்கும்படியாக உயிலை என் கணவர் எழுதமாட்டார் — எழுதவில்லை....'' என்ற கோகிலா சட்டென்று எழுந்தாள். ''இன்னும் ஏதாவது உண்டா, வக்கீல் சார். நாங்கள் போகலாமா?'' என்று கேட்டாள்.

''அவ்வளவுதானம்மா. வேறொன்றுமில்லை'' என்றவாறு வக்கீல் நீலமேகம், உயிலை மடித்துப் பெட்டிக்குள் வைத்துக் கொண்டே தாமும் கிளம்பத் தயாரானார். கோகிலா தன் தங்கை பின் தொடர மாடிப் படிகளில் ஏறிக் கொண்டிருந்தாள். அவர்கள் முகங்களில் வெற்றிப் பெருமிதமும், மகிழ்ச்சிப் பிரதிபலிப்பும், அகம்பாவமும் அலட்சியமும் கலவைவிட்டிருந்தன.

டெலிபோன் மணி கிணு கிணுத்தது. சேகருக்குத்தெரியும், அது தனக்குத்தான் என்று. தான் விரும்பிய தகவலைத் தெரிவிக்கத் துரைசாமி தான் போன் செய்கிறார் என்பதை அறிந்து அதை எடுக்க அவசரமாக எழுந்தான். கோகிலாவும் லலிதாவும் மாடியேறி மறைந்து விட்டிருந்தார்கள். சேகர் டெலிபோனைக் கையில் எடுத்த அதே வேளையில் டெலிபோன் குழலில் 'க்ளிக்' என்று ஓர் ஒலியும் கோகிலாவின் அதிகாரக் குரலும் ஒலித்தன. மாடிக்கும் கீழும் ஒரே தொடர்புடைய டெலிபோன் அது.

''முல்லைவாசல் ஜமீன் பண்ணை பங்களா. யார் வேண்டும் உங்களுக்கு?'' கோகிலாவின் குரல் கேட்டது.

''நான் சி. ஐ. டி. துரைசாமி. அங்குள்ள புரொபசர் சேகரிடம் பேசவேண்டும்.'' — இந்தச் சமயத்தில் சேகர் குரல் கொடுத்தான். ''ஐ ஆம் சேகர் ஹியர்....'' இவன் குரல் கொடுத்த பிறகும் கோகிலா டெலிபோனைக் கீழே வைக்கவில்லை. தங்கள் உரையாடலை இடைமறித்துக் கேட்கிறாள் அவள் என்பதைப் புரிந்து கொண்டான் சேகர். இல்லாவிட்டால் அவள் போனை வைக்கும் அந்தக் 'க்ளிக்' ஒலி கேட்டிருக்குமே? அது கேட்கவில்லை.

''அவள் இங்குதான் இருக்கிறாள்...'' துரைசாமியின் குரல் ஒலித்தது. ''அவளுடைய பழைய எஜமானரான டாக்டரின் வீட்டில் தங்கி யிருக்கிறாள்.''

''ரொம்ப தாங்க்ஸ் துரைசாமி... உங்களிடம் இன்னொரு உதவி கேட்கலாமா? அவள் அங்கிருந்து எப்போது கிளம்புகிறாள், எங்கே போகிறாள் என்பதை அறிந்து கூற முடியுமா?''

''இந்தத் தகவல்கள் உங்களுக்கு மிகவும் அவசியமா? எந்த வகையில்?''

''நான் ஒரு முடிவுக்கு வந்தபின் இதற்கான காரணத்தை உங்களுக்கு மகிழ்ச்சியோடு விளக்குகிறேன் துரைசாமி. ஆனால் இப்போது வற்புறுத்தாதீர்கள்.... ம்... தைரி டை... காளியப்பனைப் பற்றி ஏதாவது தகவல் கிடைத்ததா?''

''ஒன்றும் கிடைக்கவில்லை. எங்கோ தலைமறைவாகி விட்டான் என்பதைத் தவிர வேறு தகவல்கள் ஏதுமில்லை....''

''விரைவிலேயே உங்களுக்கு அவனைப் பற்றிய தகவல் கிடைக்கும்... தாங்க்யூ மிஸ்டர் துரைசாமி....!''

''தாங்க்யூ... சார்...'' துரைசாமி போனை வைக்கும் ஒலி கேட்டது. சேகர் டெலிபோனை வைக்கவில்லை. சில விநாடிகளுக்குப் பிறகு இன்னொரு ஒலி கேட்டது. எக்ஸ்டென்ஷன் ஆகிய மாடியில் உள்ள டெலிபோனில் கோகிலா அதை வைத்த ஒலிதான் அது. தங்கள் உரையாடலை அவள் முழுதும் கேட்டிருக்கிறாள் என்பதில் சேகருக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை.

பேசி விட்டுத் திரும்பிய போது வக்கீல் நீலமேகம் படி இறங்கிப் போய்க் கொண்டிருந்தார். சிந்தனை வயப்பட்டு உட்கார்ந்திருந்தாள் மஞ்சுளா.

அந்தச் சூழ்நிலையின் இறுக்கத்தைக் குறைத்து இலேசாக்க வேண்டும் என்று விரும்பினான் சேகர். ஆகவே உற்சாகமான குரலில், ''மஞ்சு, என்ன இப்படிச் சிலையாக உட்கார்ந்து விட்டாய்? இத்தனை பெரிய சொத்துக்கு அதிபதியாகி விட்டதற்காக நீ எங்களுக்கு ஒரு ட்ரீட் கொடுக்க வேண்டாமா?'' என்று அவள் அருகில் போய் உட்கார்ந்தான்.

''தகப்பனாரையும் அருமைத் தாத்தாவையும் இழந்து துக்கத்தில் மூழ்கிக் கிடக்கும் உன் மஞ்சுவிடமிருந்து இந்தச் சமயத்தில் நீ 'ட்ரீட்'டை எதிர்பார்க்கலாமா சேகர்?'' என்றான் கோபால்.

''உண்மைதான். அந்தத் துக்கம் தாங்க முடியாததுதான். அதற்காக இந்த மகிழ்ச்சியைக் கொண்டாடாமல் இருக்க முடியுமா? ஏன் மஞ்சு? என் மஞ்சு அப்படியெல்லாம் மனமொடிந்து போய்விடக் கூடியவள் இல்லை. கம்ஆன் டார்லிங்... நாம் நம் வீடுதிக்குப் போகலாம் வா'' அவனை அணைந்தக

# இல்லத்தரசிகளுக்கு இனிப்பான செய்தி!




சமையலறையில் மகிழ்ச்சி ததும்பிட
பளபளப்பான வெண்மையில் பளிச்சிடும்

**கிஸ்ஸான் கிரைண்ட்மாஸ்டர்** இன்றே வாங்கிடுவீர்

அரைவை மிஷின்களிலே அதி நவீனமானது (wet and dry grinding)
5, அளவுகளில் கிடைக்கின்றது

**வாழ் நாள் முழுவதும் உறுதுணையன்றோ!**

அரைவைப் பணிகள் அனைத்தையும் விரைவிலே
முடித்துக் கொடுத்திடும் பாங்கினைப் பாரீர்!
இட்லி மாவு, தோசை மாவு எதுவென்றாலும்
ஒருசில நிமிடங்களில் தயார், தயார்!
சாம்பார்ப்பொடி, ரசப்பொடி மசாலா, சட்னி
நினைத்த மறுகணமே நேர்த்தியாய் வழங்கிடும்!
இத்தனைக்கும் எடுத்துக் கொள்வது
மிகக் குறைந்த அளவு மின்சாரமே.

Show Room :
MARATHA MANDIR DR. A. NAIR ROAD,
BOMBAY - 8.

Works :
186, ZAKARIA BUNDER ROAD, SEWRI,
BOMBAY - 15.

**KISSAN MANUFACTURING IND. (P.) LTD.** 56, Pantheon Road, Egmore, MADRAS-8. Tel. 20694







# அமிர்தாஞ்சனம்

## விரைவில் குணமளிக்கிறது!

அமிர்தாஞ்சனம் தலைவலி, ஜலதோஷம், சுளுக்கு, தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டு வரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.

**10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி**

அமிர்தாஞ்சன் லிமிடெட் AM-5981

---

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும் பலத்திற்கும்

**அருணா**
ஸ்திரீகளின் ஆரோக்கியத்திற்கு

**பால ப்ராஸ**
குழந்தைகள் டானிக்

**1898 முதல் பிரசித்தி பெற்றது**

**சியவன ப்ராஷ்**
இருமலுக்கு

**ரக்த சோதக**
ரத்த விருத்திக்கு

**ஆயுர்வேதாஸ்ரமம் (பி) லிமிடெட்**
100 – கோபதி நாராயணசாமி ரோட், சென்னை-17

கொண்டே எழுந்தான் சேகர். மஞ்சு மௌனமாக அவன் செயலுக்கு உடன் பட்டாள். மூவரும் வேப்ப மரத்துப் பங்களாவுக்குச் செல்லும் பாதையில் மௌனமாக நடக்கலானார்கள். சேகரின் உள்ளத்தில் ஒரு கூடைப் பிரச்னைகள். என்ன செய்ய வேண்டும், எப்படிச் செயல்பட வேண்டும் என்பதற்கான திட்டங்கள் அவன் நெற்றிப் பொட்டைத் துளைத்துக் கொண்டிருந்தன.

அப்போது மாலை இரவோடு கலந்து உறவாடும் உல்லாசமான வேளை.

இரவு சாப்பாடும் முடிந்தது..... மஞ்சுளாவிடம் குடிகொண்டிருந்த அதீதமானதோர் அமைதி கலையவே இல்லை. வந்ததிலிருந்து அவளிடம் காணப்பட்ட பரபரப்பு, மகிழ்ச்சி, சுறு சுறுப்பு, கோபம், ஆத்திரம் ஏதுமே இல்லை. அப்படியொரு மௌனம். எதையோ எண்ணி இடிந்து போனவள் மாதிரித் தோன்றினாள். இதைப் பார்வையால் வினவினான் சேகரிடம், கோபால். சேகரும் அதைக் கவனிப்பதாக விழியாலேயே பதில் கூறினான்.

வேப்ப மரத்துப் பங்களாவின் கூடத்தில் உட்கார்ந்திருந்தார்கள் மூவரும். திடீரென்று சேகருக்குத் தாகம் எடுத்தது. ''கோபால், அந்தப் பானையிலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடேன்'' என்றான். பானைக்குள் தம்ளரை நுழைத்த கோபால் வியப்போடு வெறுங் கோப்பையை வெளியில் எடுத்தான். ''காலையில் நான்தானே பானையில் தண்ணீர் நிரப்பினேன். நாம் பகல் முழுதும் இங்கில்லை. இதிலிருந்த தண்ணீர் என்னவாயிற்று? பானை காலியாக இருக்கிறதே!'' என்றான். பானை நீரைக் கீழே கொட்டிவிட்டு அதைக் காலியாக்கி வைத்தது சேகர்தான் என்று அவனுக்குத் தெரியுமா? தண்ணீர் மறைந்த மர்மத்தை விடுவிப்பதில் கோபாலைப் புக விடாமல் சேகர், ''சரி.... நீ பங்களாவுக்குப் போய்க் காவேரியம்மாளிடம் கேட்டுக் கொஞ்சம் ஐஸ் வாங்கிக் கொண்டு வா போ. மஞ்சுளா, வரும் போது ஆரஞ்சு ஸ்குவாஷ் ஒரு பாட்டில் வாங்கி வந்தாயே அது இருக்கிறதில்லையா?'' என்று கேட்டு எழுந்தவன், ''இப்போது ஏதாவது குளிர்ச்சியாகச் சுவையாகக் குடிக்க வேண்டும் போலிருக்கிறது'' என்றான்.

இத்தனை நேரம் சலனமற்றிருந்தவள் சேகரின் இந்தத் தேவையை அறிந்ததும், ''பெட்டியிலிருக்கிறது. இதோ எடுத்து வருகிறேன்'' என்று எழுந்தாள். அவள் தோள்களைப் பற்றிச் சோபாவில் உட்கார வைத்தான் சேகர்.



''பெட்டியிலிருந்து நான் எடுத்துக் கொள்கிறேன். நீ பேசாமல் உட்கார்ந்திரு. உனக்கு மனமே சரியில்லை. தவிர நீ பழைய மஞ்சுளாவல்ல இப்போது. தெரிந்ததா?'' என்றான் சேகர் கண்களைச் சிமிட்டியபடியே.

மஞ்சுளாவின் கண்களில் கரை கட்டி இருந்த கண்ணீர் 'குபுக்' என்று உடைத்துக் கொண்டு பொங்கியது. ''நான் பணக்காரி என்றுதானே கேலி செய்கிறீர்கள் சேகர்? நன்றாகக் கேலி செய்யுங்கள். எனக்கு இந்தப் பண்ணையின் பணத்தில் ஒரு பைசாக்கூட வேண்டாம்!'' என்று குழந்தையைப் போல் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு விம்மலானாள் மஞ்சுளா.

எவ்வித உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தாமல் இருந்தவளின் உணர்ச்சிகளைக் கிளறி விட்டாகி விட்டது என்ற மகிழ்ச்சி சேகருக்கு. அவள் கொஞ்சம் அழவேண்டும். அப்போதுதான் பழைய நிலைக்கு வருவாள் என்பதைத் தெரிந்தவன் அவன். ஆகவே, அவளை அப்படியே அழ விட்டு விட்டு உள்ளே சென்று பெட்டியிலிருந்து ஆரஞ்சு ஸ்குவாஷ் புட்டியை எடுத்து அதை நான்கு கண்ணாடி தம்ளர்களில் ஊற்றிச் சுவையான பானம் தயாரித்தான். இரண்டு தம்ளர்களில் எதையோ அவசரமாகக் கலந்தான். பிறகு அதை அடையாளமாகத். தனிமைப்படுத்தி, நான்கு தம்ளர்களையும் தட்டில் வைத்து

கூடத்திலிருந்த டீப்பாயில் கொண்டு வந்து வைத்தான்.

மஞ்சுளா இன்னமும் விசும்பிக் கொண்டிருந்தாள். இதற்கு மேல் அவளை அழ விடக் கூடாது என்று சேகர் அவள் அருகில் அமர்ந்து அவளைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டு சமாதானப்படுத்தினான். ஒரு காதலியின் கண்ணீரைக் காய வைத்து அவள் முகத்தில் புன்னகையை மலர வைக்கும் கலை சேகராகிய இந்தக் காதலனுக்கும் தெரியுமே! மற்றவர்களைவிட அதைக் கையாளுவதில் வல்லவனும்கூட அவன். ஒரு சிறு பித்தளைத் தூக்கில் ஐஸ் கட்டிகளுடன் உள்ளே நுழைந்த கோபால் காதலர்களின் அந்தரங்கமான தனிமையைப் பாழாக்கி விட்டோமோ என்று சட்டென்று பின்வாங்கினான். அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சேகர் நண்பனின் மன நிலையைப் புரிந்து கொண்டவனாக, ''கோபால், வாப்பா! தாகத்தோடு எத்தனை நேரமாக உனக்காகக் காத்திருக்கிறேன், தெரியுமா? கொண்டா இப்படி!'' என்று எழுந்திருந்தான் காதலியின் அணைப்பிலிருந்து விடுபட்டவனாக. மஞ்சுளாவின் அழுகை நின்றிருந்தாலும் அவளது விழிகளின் ஈரம் காயவில்லை. நாசியின் சிவப்பும் மறையவில்லை. சின்னக் கைக்குட்டையால் கண்களையும் மூக்கையும் துடைத்துக் கொண்டாள். இதற்குள் சேகர் தான் தயாரித்திருந்த பானத்தில் ஐஸ் கட்டிகளைப் போட்டு ஒன்றைக் கோபாலிடமும் ஒன்றைத் தனக்காகவும் எடுத்துக் கொண்டான். தனிமைப் படுத்தி இருந்த இரண்டு கிளாஸ் சர்பத்தில் ஒன்றை எடுத்து மஞ்சுளாவிடம் கொடுத்தான். மற்றது தட்டிலேயே இருந்தது.

''எனக்கு எதற்கு....?'' என்றாள் மஞ்சுளா.

''நான் தயாரித்திருக்கிறேன். சாப்பிட்டுப் பார். இத்தனை நேரம் அழுதிருக்கிறாயே. அதற்கு இந்தப் பானம் இதமாக இருக்கும்'' என்றவன் மறுபடியும் அவள் அருகில் போய் உட்கார்ந்து கொண்டு தன் பங்கைக் கலக்கலானான். தன் காதலி பானத்தைப் பருகுவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மஞ்சுளா ஒரு வாய் குடித்ததுமே, ''சேகர்.... ஸ்குவாஷில் நீர் கலக்க மறந்து விட்டீர்களா? ரொம்ப ஸ்ட்ராங்காக இருக்கிறதே!'' என்றாள்.

'' காரணத்தோடுதான் ஸ்ட்ராங்காகத் தயாரித்தேன். ஐஸ் கரைந்தால் ருசி சரியாகிவிடும்....ம் குடி....'' என்று ஊக்கினான்.

மஞ்சுளா அரை மனத்தோடு பருகலானாள். மறுபடியும் ''சேகர்....பானம் ஏதோ ருசியில் மாறுபட்டிருக்கிறது போலிருக்கிறதே!'' என்றாள் புருவங்களைக் கூட்டி.

''இருக்காதே..? ஒருவேளை ஸ்குவாஷ் நாளானதாக இருக்கும்... நல்ல வேளை, நான் இன்று பானம் சாப்பிட ஆசைப்பட்டதும் நல்லதாயிற்று. இல்லாவிட்டால் நாள்பட்ட சரக்கு வீணாகி இருக்கும்...''

இதற்குள் மஞ்சு தம்ளரைக் காலி பண்ணி இருந்தாள். சேகர் சட்டென்று தயாராக இருந்த மற்றொரு தம்ளர் பானத்தை எடுத்து அவளிடம் நீட்டினான்.

''வேண்டாம், சேகர்.... இதுவே எனக்கு அதிகம்......'' என்று மறுத்தாள் மஞ்சு.

ஆனால் சேகர் விடுவதாக இல்லை. ''கலந்து விட்டேன். அதுவும் உனக்காக.... நீ ரொம்ப அதிர்ச்சியடைந்து போயிருக்கிறாயே என்று அதிகமாகவே கலந்தேன். எனக்காகச் சாப்பிடு'' என்று வற்புறுத்தி அவள் கையில் திணித்தான். கோபாலுக்குத் தன் நண்பனின் இந்தச் செயல் வியப்பாக இருந்தது. உணவு விஷயத்தில் அவன் யாரையும் வற்புறுத்த மாட்டானே! ஏன் இப்படி இன்றைக்கு?

இதற்குள் காதலனின் கட்டாயத்தைத் தட்டமாட்டாத மஞ்சுளா அந்த இரண்டாவது தம்ளர் பானத்தை மெல்லச் சுவைக்கலானாள். ''சேகர்... என்னவோ தெரியவில்லை. மயக்கம் வரும் போல் இருக்கிறது'' என்று நெற்றிப் பொட்டை அழுத்திக் கொண்டாள். அப்படியே அவளைத் தன்மீது சாய்த்துக் கொண்ட சேகர், ''இன்றைக்கு நீ ரொம்ப மனத்தை உடைய விட்டு விட்டாய் மஞ்சு. அதனால் ஏற்பட்ட 'நெர்வஸ் டென்ஷ'னாகத்தான் இருக்கும். கவலைப்படாதே. அதைக் குடித்து விட்டு அமைதியாக...'' என்று சொல்லிக்கொண்டு போவதைக் கேட்கும் நிலையில் மஞ்சுளா இல்லை. அவள் அவன் மார்பு மீது நினைவிழந்து விட்டாள்.

மௌனமாக இதைப் பார்த்துக் கொண்டிருந்த கோபால் திகிலடைந்தவனாக ''சேகர்...'' என்றான்.

நிலைமையைப் புரிந்து கொண்ட சேகர், ''உஷ்...!'' என்று தன் உதட்டில் விரலை வைத்து அமைதியாக இருக்கும்படி சைகை செய்தான். பிறகு அவள் பருகி வைத்திருந்த பானத்தைக் கையிலிருந்து மெல்ல அகற்றி டீப்பாயில் வைத்தான். (தொடரும்)

# "வெளியிலேயே இரு!"

(சென்ற வாரத் தொடர்ச்சி)

"சதாசிவா, சதாசிவா! ஏன் சிரிக்கிறாய்? நீ பீடாதிபதியானாலும் சந்திரமௌளீச்வர பூஜை செய்யணும் என்றேன். அதற்கா இப்படிச் சிரிக்கிறாய்?" என்று ஆச்சரியத்துடன் வினவினார் ஆசார்யேந்திரர்.

"சந்திர மௌளீச்வரருக்கா, பூஜையா? பூஜை என்றால் அவனை ஓரிடத்தில் ஆவாஹனம் செய்ய வேண்டும், ஆசனம் போட வேண்டும், கால் அலம்பப் பாத்யம் வழங்க வேண்டும், திருமுழுக்காட்ட வேண்டும், வஸ்திரம் உடுத்த வேண்டும், சந்தனம் பூச வேண்டும்; தீபாராதனை காட்ட வேண்டும், நிவேதனம் செய்ய வேண்டும், குடை பிடிக்க வேண்டும் — அப்படித்தானே?" என்று கேட்டு விட்டு மீண்டும் சிரித்தார் சதாசிவப் பிரம்மம்.

சிரிப்பு ஓய்ந்தது. மிகுந்த நெகிழ்ச்சியுடன் சுலோகத்தை அடுத்துச் சுலோகமாக முப்பது அமுத சுலோகங்களை இசைத்தார்.

'எங்கேயும் இருப்பவனை எந்த ஓரிடத்தில் ஆவாஹனம் செய்வேன்? எங்கும் உறைபவனுக்கு எப்படி ஆசனம் போடுவேன்? எங்கணும் பரவும் பாதமுடையவனுக்குப் பாத்யம் அளிப்பது எப்படி? நித்ய சுத்தனுக்குத் திருமுழுக்காட்டி மாசு களைய ஏது அவசியம்? திகம்பரனுக்கு ஏது வஸ்திரம்? 'ஸுகந்திம் புஷ்டி வர்தனம்' என்று வேதம் பாடும் நறுமண மூர்த்திக்குச் சந்தனம் பூசவா? ஸ்வயம்பிரகாச வஸ்துவுக்கும் தீபாராதனையா? தன்னில் தானே திருப்தி கொண்டு ஆனந்தத்தை உண்பவனுக்கு நிவேதனம் வேறு? வானத்தைத் தலையாகக் கொண்டவனுக்கு எவ்வாறு குடை பிடிப்பேன்!' என்றிப்படி சதாசிவர் பாடிய பாடலுருவமே 'சிவமானஸிக பூஜா ஸ்தோத்திரம்.'

சாமானிய மானுடர்களான நாம் சில சமயங்களில் பரம ஞானி போல் நடிக்கிறோம் எனில், பரம ஞானிகள் உலகுக்கு வழி காட்டவே தங்களுக்கும் பேத உணர்ச்சி இருப்பது போல் காட்டிக் கொண்டு நடிப்பார்கள். நமக்கு மார்க்கம் தெரிவதற்காக, அவர்களே பூஜை புரஸ்காரம் செய்வார்கள், ஆசாரங்களை அனுஷ்டித்துக் காட்டுவார்கள். ஆனால் இவ்விதம் பிறருக்காகச் செய்ய வொண்ணாத நிலையில் உள்ள ஞானியர் வரிசையைச் சேர்ந்தவர் சதாசிவர்.

இவர் மீது பீடாதிபத்தியத்தைச் சுமத்துவது தர்மமில்லை எனக் கண்டார் பரமசிவர்.

"சதாசிவா, உன்னை நான் பீடத்தில் கட்டுப்படுத்த வில்லை. உன் கட்டை யெல்லாம் அவிழ்த்துவிட்டேன்" என்றார் பரமசிவர், கண் நிறைந்த கருணை நீருடன்.

"கட்டு அவிழ்ந்தது, கட்டு அவிழ்ந்தது" என்று கூவிக் கொண்டு ஓடினார் சதாசிவர். அவர் ஆத்ம வித்யாவிலாசத்தில் பாடியது போல் ஆடையையும் துறந்து, கட்டற்று ஓடினார். ஆண் பெண் வித்தியாசம் ஏதும் இராதவருக்கு ஆடை அவசியமாகப்பட...





யில்லை. குளிர், வெயில் தெரிந்தாலும் ஆடை வேண்டும். இவருக்கு அந்த உணர்வும் இல்லை. சாரமற்ற உலகியல் பாலைவனத்தை விட்டு ஆனந்தச் சுனை நிறைந்த ஞானத் தடாகத்தில் பரமஹம்ஸமாக நீந்தலானார். சாஸ்திரக் குவியலையும் நீக்கி, நிச்சலன நந்தாவிளக்காகப் பூமி எங்கும் திரிந்தார்.

''ஆதியில் சதாசிவத்தைப் பிச்சு என்பார்கள். இப்போது உண்மையாகவே, பிச்சாக, பைத்தியமாக ஆகி விட்டார்'' என்று பரமசிவேந்திரரிடம் சீடர்கள் கூறினார்கள்.

''அந்தப் பைத்தியம் எனக்குப் பிடிக்கவில்லையே'' என்று பெருமூச்செறிந்தார் பரமசிவர்.

தனி மனம் ஒடுங்கினாலும், பிரபஞ்சத்தை இயக்கும் பராசக்தியின் மனம் ஓய்வதில்லை. பிரம்ம ஞானியின் தனி மனம் ஒடுங்கிய பின் அவன் அந்தப் பிரபஞ்ச மனத்தின் விளிம்பில் நின்று விளையாடுவதும் உண்டு; அல்லது பிரபஞ்ச மனம் தான் அந்த பிரம்மஞானியின் ஆத்ம வெளியில் நின்று விளையாடுமோ, என்னவோ? இந்த நிலையில்தான் அவர்களால் பௌதிக அதீதமான, இந்திரிய அதீதமான, இயற்கைக்கு அப்பாற்பட்ட அற்புதங்களைப் புரிய முடிகிறது. ஏதேனும் ஒரு மந்திரத்தை கோடானு கோடி ஆவிருத்தி ஜபித்து, மந்திர சித்தி பெற்று, சித்து செய்வது வேறு; பரப் பிரம்ம நிலையிலிருந்து பராசக்தி நிலைக்கு வந்து அற்புதம் செய்வது வேறு. அந்த நிலையில் அற்புதம் என்பது அற்புதமும் அல்ல; அதுவே சாமான்ய, சகஜ, பிரகிருதி தர்மமாக, இயற்கைச் செயலாக ஆகிறது. இப்படி 'அற்புதம்' செய்த — செய்கிற — பரம ஞானிகளும் அவதார புருஷர்களும் பலர் உண்டு. தங்களது 'பிரதாபத்தை' பிரகடனம் செய்து கொள்வதற்காகச் செய்யப்படும் சித்துக்களோடு இவற்றைச் சேர்த்துவிட கூடாது. கருணை ஒன்றே இந்த ஞானியரின் அற்புதங்களுக்குக் காரணமாகும்.

ஞான நிலையின் கொடுமுடிக்கே சென்ற சதாசிவ பிரம்மேந்திரர்கள் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்திருக்கிறார் — அவை அற்புதம் என்ற எண்ணமேயில்லாமல்.

அவதூதரான சதாசிவர் ஒரு நாள் ஒரு முஸ்லிம் கனவானுடைய அந்தப்புரத்துக்குள் சென்று விட்டார். (திருச்சியில் ஆட்சி செய்த சந்தா சாகிப்தான் இந்த முஸ்லிம் பிரமுகர் என்று சொல்வர்.)

''கோஷாக்களின் இருப்பிடத்தில் வருகிற இந்த நாய்பயல் யார்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டுக் கொண்டே வந்தார் முஸ்லிம் பிரமுகர்.

விடையேதும் பகராமல் சதாசிவர் சாவதானமாகப் போய்க் கொண்டே யிருப்பதைக் கண்டதும் பிரமுகரின் ஆத்திரம் ஓங்கியது.

புனிதரின் கரத்தை வாளால் வெட்டி வீழ்த்தி விட்டார் அந்த முஸ்லிம்.

அப்போதும் சாவதானமாகப் போய்க் கொண்டேயிருந்தார் சதாசிவர்.

பிரமுகருக்குத் திடுக்கிட்டது. இவர் யாரோ மகான்' என்று புரிந்தது.

அவரைத் தொடர்ந்து ஓடினார்.

நீண்ட நேரத்துக்குப் பிறகே சதாசிவரின் எண்ணம் இவ்வுலகுக்கு வந்தது.

''நீ யாரப்பா, ஏன் என் பின் வருகிறாய்?'' என்றார்.

''ஸ்வாமி, மன்னிக்க வேண்டும். உங்களுக்கு நான் பெருத்த அபசாரம் செய்துவிட்டேன்'' என்றார் முஸ்லிம்.

''அபசாரமா, என்ன அபசாரம், அப்பனே!'' என்று பரிவுடன் வினவினார், அபசாரம் — உபசாரம் இரண்டும் கடந்த ஆத்மஞானி.

''ஸ்வாமி, தங்களது கையை நான் வெட்டி விட்டேன்'' என்று கூறி 'தேறா'' எனக் கதறினார் முஸ்லிம்.



'எனக்கு உடம்பே இல்லை என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். எனக்குக் கை என்று ஒன்று இருந்ததாகவும், அதை வெட்டி விட்டதாகவும் இவன் சொல்கிறானே. சொல்வதோடு நில்லாமல் இப்படிக் கதறுகிறானே!'

கை போனதைப் பற்றி இவருக்குக் கருத்து இல்லை. ஆனால் பச்சாத்தாபத்தில் அந்த முஸ்லிம் கதறுவதே இவருக்குக் கருத்தாயிற்று. கருத்து கருணையாயிற்று; கருணை அற்புதமாயிற்று!

"அழாதே, அப்பனே! நீ எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. இதோ பார்!" என்றார்.

நம் உலகியல் விதியின்படி அதை அற்புதம் என்றுதான் சொல்ல வேண்டும் — வெட்டப்பட்ட கை மறுபடியும் முழுவதும் வளர்ந்து, வெட்டியவனுக்கு ஆனந்தம் தந்து கொண்டிருந்தது!

* * *

உலகில் உள்ள மலை, மரம், நதி, மிருகம், விலங்கு, பட்சி, மனிதர் அனைத்தையும் குழந்தைகளாகப் பாவித்தபடி பேசிக் கொண்டேயிருந்தார் சதாசிவர்.

அங்கே ஓரிடத்தில் சில குழந்தைகள் உம்மென்று முகத்தைத் தூக்கிக் கொண்டு நிற்பதைப் பார்த்தார். கருணை வெள்ளமாகப் பெருகியது.

"பசங்களா! மதுரையிலே உத்ஸவம் பார்க்கப் பக்கத்து அகத்து மிட்டு, மிட்டு எல்லாம் போறது, நாம போகலியேன்னுதானே மூஞ்சியைத் தூக்கி வெச்சிண்டிருக்கேள்! என்னோட மதுரைக்கு வரேளா?" என்று கேட்டுப் பால் பொழிவாகச் சிரித்தார்.

"வரோம், தாத்தா!" என்று குழந்தைகள் உத்ஸாகத்துடன் ஒரே மணிக் குரலில் கூவின.

"சரி, கண்ணை மூடிண்டு இந்தத் தாத்தாவை எல்லோரும் கட்டிப்பேளாம், என்ன?" என்றார் அருளாளர்.

"சரி, தாத்தா!"

பகவானை பக்தர்கள் எப்படி இறுகக் கட்டிக் கொள்ள வேண்டுமோ, அப்படித் "தாத்தா"வைக் குழந்தைகள் கட்டிக் கொண்டன. அவர் கழுத்தில் உட்கார்ந்து கொண்டு தலையைக் கட்டிக் கொண்டது ஒரு குழந்தை. முதுகைக் கட்டிக் கொண்டது ஒன்று. இரு கைகளையும் இரு ஜோடி இளம் கரங்கள் பற்றிக் கொண்டன. மார்புப் பக்கமாகத் தொற்றிக் கொண்டது ஒரு குழந்தை.

"எல்லாரும் கண்ணை மூடிண்டாச்சா? சரி! இதோ...." என்றது கிழக் குழந்தை.

எங்கோ வான வீதியில் பறப்பதுபோல் இருந்தது.

"ஊம், கண்ணைத் திறங்கோ" என்று அடுத்த விநாடியே ஆக்ஞை பிறந்தது.

குழந்தைகள் கண்ணைத் திறந்தால்....ஆகா, மதுரையின் அழகிய திருவீதி. இதோ கம்பீரமாக ரிஷபத்தின் மீது காருண்ய லாவண்ய மீனாட்சி சுந்தரேசுவரர்கள் பவனி. குழந்தைகளுக்கு அதைவிடப் பிடித்தமான பட்சணக் கடைகள், யானை சவாரி, பொய்க் கால் குதிரை!

குழந்தைகளுக்குத் தரிசனம் செய்வித்தார்; விளையாட்டுச்சாமான்கள் வாங்கினார்; பட்சணம் வாங்கிக் கொடுத்தார் பிரம்ம ஞானி.

மறுபடி தம்மைக் கட்டிக் கொண்டு கண்களை மூடிக் கொள்ளச் சொன்னார்.

மறு விநாடி சொந்த ஊருக்குத் திரும்பியாகி விட்டது.

குழந்தைகளிலிருந்து கோமகன் வரை இவருக்கு அனைவரும் ஒன்றுதான்.

புதுக்கோட்டை மன்னர் விஜய ரகுநாதத் தொண்டைமான் சீரும் சிறப்பும் பெற்றது இவர் அருளால்தான் என்பர்.

மன்னன் இவரைப் பிரார்த்தித்துக் கொண்ட போது, இவர் ஏதும் பேசவில்லை. மண்ணில் ஒரு மந்திரத்தை விரலால் எழுதி விட்டு மறைந்தார். அந்த மண்ணை அப்படியே வாரி எடுத்து வந்து பூஜையில் வைத்தார் தொண்டைமான். மண் வந்த வேளை பொன் மாரி பொழிந்தது. தொண்டைமானுக்குச் சகல கடாட்சமும் கூடிற்று.

தஞ்சையை ஆண்ட ஷாஹஜி மகாராஜா சதாசிவருக்கு அழைப்பு விடுத்தார்.

"நமக்கு உணவு பிச்சை எடுத்தாலே தாராளமாகக் கிடைக்கிறது. உடுக்கத் துணி வேண்டுமென்பதில்லை. படுக்கவோ பரந்த பூமி உள்ளது. மன்னனால் ஆக வேண்டியதென்ன?" என்று கவிதையாக விடை சொல்லி, விடை பெற்றார் விராகி.

அபிமஹீ [illegible] ஆசாவாஸோ [illegible]!
[illegible] ஸர்வதா!!

சரபோஜி மகாராஜாவுக்கு அவரது ஆஸ்தான பண்டிதராக இருந்த மல்லாரி எழுதிய வடமொழிக் கடிதம் ஒன்று தஞ்சை சரஸ்வதி மஹால் சுவடிகளில் காணப்படுகிறது. அதன் வாசகம்:

"நீண்ட காலமாக விரும்பியபடி, பிரம்ம ரூபமான சதாசிவ பிரம்மத்தைத் தரிசித்தேன். மன்னர் பெருமான் என்னிடம் பணித்திருந்தபடி, தங்களுக்குப் புத்திரப் பிராப்தி ஏற்பட வேணுமென அவர்களிடம் பிரார்த்தித்தேன். 'சீக்கிரம் ஏற்படும்' என சைகை காட்டினார். ஆத்ம வித்யா விலாச நூலைப் பிரசாதமாக அளித்தார். தங்களது சிரேயஸின் பொருட்டு அவருக்கு மூன்று பிட்சைகள் செய்தேன். இப்போது தங்களுக்குப் புத்திர லாபம் கிடைத்திருப்பதாகக் கேட்கிறேன். மகான்களின் பிரசாதம் எந்த சிரேயஸையும் செய்யும் என்று சொல்வது உண்மைதானே?"

ஷாஹஜியை ஏறிட்டுப் பார்க்காமல், "நமக்கு உணவு பிச்சை எடுத்தாலே கிடைக்கும்" என்றவர், சரபோஜியின் சார்பில் வழங்கப்பட்ட மூன்று பிக்ஷைகளை ஏற்று அனுக்கிரகித்திருக்கிறார். மகானுக்குப் பாரபட்சமா? அல்ல, அவரவர்களுடைய பூர்வ கர்மம் அவரை அப்படி நடக்கச் செய்தது!

நிர்குண பிரம்மத்தையே தியானித்து நிர்விகல்ப சமாதியிலேயே ஆழ்ந்திருந்த சதாசிவ பிரம்மேந்திரர்கள் வெளி முகப்பட்டு அற்புதங்களைச் செய்தது எப்படி? அவர் ஒருவர்

சமாதி நிலையில் இருந்தாலும், உலகு என்ற ஒன்று நடந்து கொண்டுதான் இருந்தது. அதை நடத்தும் சக்தி ஓயாமல் செயற்பட்டுக் கொண்டேதான் இருந்தது. இந்தப் பிரபஞ்சக் காட்சியையும் செய்த அந்தச் சக்தி தான் ஆதியில் பிரம்ம என்று ஒருவனையாவும் பண்ணி அனுப்பியது. பிரம்மவுக்கு பிரம்ம ஞானம் வந்த பிறகும் அந்தப் பிரபஞ்ச சக்தி தான் அவரில் அற்புத சித்திகளைக் கூட்டி வைத்து லீலை செய்ய வைத்தது. இதை அந்த பிரம்ம ஞானியும் உணர்ந்தார். உலகை ஆட்டிப் படைத்து அருள்புரியும் சக்தியும், ஆட்டம் அடங்கிய பிரம்மமும் ஒன்றெனக் கண்டார். எனவே ஸகுண ரூபங்களையும் இனிக்க இனிக்கப் பாடித் துதித்தார். உலகின் அழகுகளை திவ்விய விளையாட்டாகக் கண்டு ரசித்த அவர் இசையின் சுந்தரத்தில் தோய்ந்து ராமனையும் கண்ணனையும் மதுர கீதங்களில் பாடினார். 'பிபரே ராமரஸம்', 'ப்ருஹி முகுந்தேதி' — போன்ற அவரது பரம லளிதமான பாடல்களைக் கேட்டு மகிழாதார் யார்?

தமது தூய அத்வைத நிலையையும் 'ஆனந்த பூர்ண போதோஹம்' போன்ற அதிகம்பீர மான கீதங்களில் வெளியிட்டார்.

பிறருக்கும் இசைப்புலமையை, இலக்கியத் திறனை வரமாக அருளும் ஆற்றல் அவருக்கு இருந்தது.

நிரட்சரகுட்சியான ஒரு பிரம்மசாரி அவருக்குத் தொண்டு புரிந்தான்.

''உனக்கு என்ன வேண்டும் அப்பா?'' என்றார் ஞானி.

''நல்ல கல்வியறிவு வேண்டும். ஸ்ரீரங்க நாதன் தரிசனம் வேண்டும்'' என்றான் அவன்.

அவர் அவனது கைபற்றினார். மறுவினாடி இருவரும் ஸ்ரீரங்கத்தில் மூலஸ்தானத்தில் நின்றனர்.

ரங்கனது தரிசனத்தைக் காட்டி, தமது தரிசனத்தை அப்போதே மறைத்து விட்டார் சதாசிவர்.

பெருமானைத் தரிசித்துப் பெரு மகிழ்ச்சி கொண்டாலும், சதாசிவரைப் பிரிந்து தவித்தான் பிரம்மசாரி.

மீண்டும் அவனுக்குக் காட்சி தந்து மந்திர தீக்ஷை அருளினார் சதாசிவர். க்ஷணகாலத்திலே அவனுக்குப் புராண சாஸ்திர ஞானம் பூரணமாகக் கைகூடி விட்டது. பெரிய பௌராணிகர் ஆனான். ''ஆகாச புராணம் ராமலிங்க சாஸ்திரிகள்'' என்று பிற்காலத்தில் பெயர் கொண்டது அந்தப் பிரம்மசாரியே.

ஸ்ரீரங்கத்துக்கும் மதுரைக்கும் மற்றுமோரை 'அழைத்து'ச் சென்ற சதாசிவர், மனம் வைத்தால் ஒரே சமயத்தில் பல ஸ்தலங்களில் இருப்பார். சிவராத்திரியில் பல க்ஷேத்திரங்களில் இவரைப் பார்த்தவர்கள் உண்டு. ஆங்காங்கே இவர் அஷ்டோத்தரம் சொல்ல எங்கிருந்தோ ஸ்வாமி மீது மலர் மாரி பொழியுமாம்!

**அ**நுபவக் கொடுமுடியில் சஞ்சரித்த இவர் கொடுமுடி கிராமத்தில் ஆற்றங்கரை அருகே ஒரு திறந்த வயலில் படுத்துக் கொண்டிருந்தார் — வரப்பைத் தலையணையாகக் கொண்டு.

''சாமியாருக்குக்கூடத் தலைகாணி கேக்குதுடா'' என்று கேலியாகச் சொல்லிக் கொண்டே போனான் ஓர் உழவன்.

'வாஸ்தவம்தான்' என்று எண்ணினார் அந்த வைராக்கியசாலி. வரப்பிலிருந்து தலையை எடுத்துக் கொண்டார். தலைக்கு உயரமாகத் தமது கையையே மடித்து வைத்துக்கொண்டார் — 'உபதாய பாணிமூலம்' என்று தாம் பாடியிருப்பதற்கேற்ப.

''வரப்போ, மடிச்ச கையோ, ஆகக்கூடிச் சாமிக்கும் தலைகாணி வேண்டித்தான் இருக்குது'' என்ற உழவனின் பரிஹாசக் குரல் காற்றில் தேய்ந்து வந்தது.

சதாசிவருக்குத் தூக்கிப் போட்டது. பேசுவது சாதாரணக் குடியானவன்தானா!

கையையும் எடுத்துவிட்டுச் சமமாக நீள நெடுகப் படுத்து விட்டார். மனம் செத்தே

## ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திரர் கோடி அர்ச்சனை

இகம்பரராய், மெய்ஞ்ஞானச் சிங்கமாய், அடியிட்ட இடங்களை யெல்லாம் புனிதமாக்கி ஜீவன்முக்தராய் உலவிய ஸ்ரீமத் சதாசிவப் பிரம்மேந்திரருடைய அதிஷ்டானம் அமைந்துள்ள நெரூர்த் திருக் கோயிலில் நாள்தோறும் பூஜையும், ஆண்டுக்கொரு முறை ஆராதனையும் நடைபெற்று வருகின்றன. இந்த அதிஷ்டானத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திக்குக் கோடி அர்ச்சனை செய்யப் பெருமக்கள் ஒரு குழுவை அமைத்திருக்கிறார்கள். ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள், ஸ்ரீ சிருங்கேரி சங்கராசாரிய ஸ்வாமிகள், இருவரின் ஆசியும் பெற்று நடைபெறும் இக்கோடி அர்ச்சனை நன்கு நிறைவேற எல்லா வகையிலும் ஆஸ்திக மக்கள் உதவுவார்கள் என்பதில் ஐயமில்லை. பணமாகவும், பண்டமாகவும் கொடுத்துதவலாம். ஒரு ஸஹஸ்ரநாமத்துக்கு ஐந்து ரூபாய் விதம் வேண்டிய அளவு ஸஹஸ்ரநாமங்களுக்கு உரிய தொகையை உதவிப் பிரசாதம் பெறலாம். ஒரு மண்டலம் 48 நாட்கள் தினம் ஓர் அர்ச்சனை செய்ய ரூ. 250, லக்ஷார்ச்சனைக்கு ரூ. 500ம் செலுத்தி உதவலாம். இந்தப் பெரும் கைங்கரியத்தால் எங்கும் சாந்தியும், அருளும் நிரம்பும் என்பதில் ஐயமில்லை. தொகையைப் பொக்கிஷதார், ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திர கோடி அர்ச்சனைக் குழு, 24, நாகேசுவரபுரம், சென்னை—4 என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

விட்டது. அப்படியே கிடந்தார் நாட்கணக்கில்.

ஆற்றில் வெள்ளம் வந்தது. வயல் வரப்பில் பல பாகங்களைக் கொள்ளை கொண்டது அது. பிறகு வெள்ளம் அடங்கியது. எங்கு பார்த்தாலும் மணல் மேடு.

மணல் மேட்டை வெட்டிக் கொண்டிருந்தான் அதே உழவன். மண்வெட்டி சுகமாகப் பாய்ந்தது ஓரிடத்தே. மறுவிநாடி குபீரெனப் பீய்ச்சியது இரத்தம்.

கலவரத்துடன் மண் மேட்டை ஜாக்கிரதையாகக் கலைத்தனர் ஊரார். அதன் உள்ளே, மேகத்துக்குள் முழு மதிபோல் நிஷ்டையில் இருந்தார் சதாசிவப் பிரம்மம். நீண்ட பொழுதுக்குப் பின்னர் நயனம் திறந்து நாற்புறமும் பார்த்தார்.

''சாமி உள்ளாற இருந்துச்சு. வெளியே எடுத்தோமுங்க'' என்று கூறி மக்கள் அவரைக் கும்பிட்டனர்.

சதாசிவர் சிந்தனையில் ஆழ்ந்தார். பிறகு குழந்தை போல் குழறிக் குழறிப் பேசினார்: ''அன்னிக்கு அம்மா உள்ளே வராதே, வெளிலேயே இருன்னு. இன்னிக்கும் உள்ளே இருக்கப்படாதுன்னு வெளிலே எடுத்துப் போட்டுட்டேளா! மாட்டேன். இப்போ எனக்கு உள்தான் வெளி. ஆமாம், உள்தான் வெளி. அந்த வெளிலே கலந்தா அப்பறம் திரும்பி வர முடியாது. நான் மறுபடி உள்ளே போப்போறேன் — அதாவது வெளியிலே இருக்கப்போறேன். இங்கே இல்லே. கரூருக்குப் பக்கத்திலே நெரூர் கிராமத்திலே—அகண்ட காவேரிக் கரையிலே... ஆமாம், இன்னிக்கு என்ன திதி?''

''பாட்டிமையங்க'' என்றனர் மக்கள்.

''ஆமாம், இது என்ன மாசம்?'' என்று கேட்டார். காலம் கடந்த அவருக்குத் திதி மட்டுமல்ல, மாதமும் தெரியவில்லை.

''வைகாசிங்க.''

''சரி, யாராவது நெரூருக்குப் போய் பிராமணாள்கிட்டே, அகண்ட காவேரிக் கரையிலே குழி வெட்டி வைக்கச் சொல்லுங்கோ. தசமியன்னிக்கு அங்கே நான் வரேன்னு சொல்லுங்கோ.''

''உத்தரவு சாமி.''

**வை**காசி மாதத்து சுக்லபட்ச தசமி.

ஏதோ நடக்கப் போகிறது என்ற இனம் தெரியாத சோகத்துடன் நெரூர் அந்தணர்கள் பெரிய குழி வெட்டினார்கள்.

அன்றலர்ந்த புஷ்பம் போல் சதாசிவ பிரம்மம் அங்கு வந்து குதித்தார்.

''உப்பு கற்பூரம் எல்லாம் மூட்டை மூட்டையா வேணுமே, உம், தயார் செய்யுங்கோ'' என்றார் சிரித்த முகத்துடன்.

விஷயம் புரிந்து விட்டது. நெரூர் மகாஜனங்கள் கண்ணீரும் கம்பலையுமாக சாமக்கிரிகளைச் சேகரித்தனர். கூட்டம் கூட்டமாக மக்கள் வந்து மகானை வணங்கினர். கருணைமயமாக ஆசி வழங்கினார் அவர்.

''எங்களை விட்டுட்டுப் போறீங்களே'' என்று தேம்பித் தேம்பி அழுதனர்.

''பைத்தியங்களா, நான் வரதாவது, போறதாவது? உடம்புதான் வரதும், போறதும். மனுஷ்ய காயம் ஒரு நாளில்லாட்டா ஒரு நாள் போகத்தானே வேணும்? இந்த ஸ்தூல சரீரம் போனாலும் என்னிக்கும் போகாது லிங்க சரீரம். அதுக்கு அடையாளமா இப்போ காசிலேருந்து பாண லிங்கம் வரும். அதை இங்கே பிரதிஷ்டை பண்ணுங்கோ'' என்று கூறிக் கொண்டே மளமளவென்று குழிக்குள் இறங்கினார் பிரம்ம நிஷ்டர்.

மண்ணும், உப்பும், கற்பூரமும் அவர் மீது சரிந்தன. குழந்தைகள் மழைத் தூற்றலை ரசித்துக் கொண்டு நனைவது போல், இந்த மண்மாரியில் திளைத்துக்கொண்டே உள்ளே அமர்ந்தார் அவர் — அதாவது வெளியே இருக்கலானார்!

புண்ணிய ரூபத்தை பூமாதேவி மூடிவிட்டாள்.

காசியிலிருந்து அதே கணத்தில் ஒரு பிராமணர் வந்து சேர்ந்தார் — பாண லிங்கத்துடன்.

பாண லிங்கம் பிரதிஷ்டையாயிற்று, ஞானியின் சமாதித் திருத்தலத்தில்.

**ச**தாசிவப் பிரம்மேந்திராளின் சமாதியிலிருந்து பெருகும் சாந்தஞான அலைகளை இன்றளவும் அநுபவித்த பெரியார் பலர். சிருங்கேரி பீடாதிபதிகளாயிருந்த ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ நருஸிம்ஹ பாரதி ஸ்வாமிகள் நெரூருக்கு விஜயம் செய்தபோது இந்த அலைகளில் அளைந்து அளைந்து பேரின்பத்தில் திளைத்தார். 'ஸதாசிவேந்திர ஸ்தவம்' என்ற நாற்பத்தைந்து சுலோகங்களையும், 'ஸதாசிவேந்த்ர பஞ்சரத்னம்' என்ற ஐந்து சுலோகங்களையும் உள்ளுருகிப் பாடி, பிரம்ம ஞானிக்கு அஞ்சலி செய்தார்.

பாணலிங்கத்தின் அருகே சதாசிவ பிரம்மத்தின் திருவுருவமாகக் கருதப்படும் விருட்சம் ஒன்று உள்ளது. இந்த விருட்சத்தடியில் ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பெரியவாள் இரவு முழுவதும் அந்தர்முகமான பிரம்ம நிஷ்டையில் ஆழ்ந்திருக்கிறார்கள்.

சரீரத்தில் வாழ்ந்ததாகக் காட்டிக் கொண்ட போது ஒரே சமயத்தில் பல இடங்களில் இருந்த சதாசிவர், இதே போல் பல இடங்களில் சமாதி கொண்டதாகக் கூறப்படுகிறது. அவற்றில் ஸ்ரீ பரமசிவேந்திரரின் அதிஷ்டானம் அமைந்துள்ள திருவெண்காட்டில் வில்வத் தருவாக இவர் நிற்பதாக ஐதிஹ்யம். இவர் அவதூதராக இருந்தாலும் அந்த விருட்சத்துக்குக் காவியைச் சுற்றி வைத்திருப்பார்கள். பார்க்கப் பார்க்க மனம் கரையும். மனித மனம் ஞான நிலையில் மரத்துப் போயிற்று. மரமோ மனித நிலையில் வஸ்திரம் அணிந்து நிற்கிறது. ஆனால் அது காவி வஸ்திரம். அதாவது மனிதன் மனத்தின் லோகத்திலிருந்து விடுபட்ட நிலைக்குரிய வஸ்திரம். மனோலோகம் நசித்த உள்ளங்களில் எல்லாம் — அதாவது வெளிகளில் எல்லாம் — சதாசிவ பிரம்மம் வாழ்கிறது. 'சதாசிவ பிரம்மம்' என்றால் என்றும் அழகாக, அறிவாக, அருளாக, ஆனந்தமாக, அமைதியாக உள்ள மெய்ப்பொருள் என்று அர்த்தம்.

வசதியான பங்களா, அற்புதமான தோட்டம், எங்கு வேண்டுமானாலும் போய் வரப் பெரிய படகு போன்ற கார், வேலையாட்கள், பாங்கில் நிறையப் பணம் — எல்லாம் இருந்தும் அவர் பெயர் அளவில்தான் நித்தியானந்தமாக இருந்தாரே தவிர, சதா கவலையுடன்தான் இருந்தார்.

''என்ன ஸார்! இப்பொழுதெல்லாம் நானும் சில நாட்களாக உங்களைக் கவனித்துக்கொண்டு வருகிறேன். முகவாட்டத்துடனேயே இருக்கிறீர்களே! இரண்டு பெண்களுக்கும் நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்து விட்டீர்கள். மூன்றாவது பெண்ணுக்குத்தான் வீட்டிலேயே மாப்பிள்ளை இருக்கிறான். அப்படியே இருந்தாலும் உங்களுக்கு இருக்கும் பண வசதிக்குக் கவலைப்படும்படியாக என்ன வந்து விட்டது? உங்கள் பையன் இந்த வருஷம் எம். எஸ்ஸி. போகிறான். இல்லையா? அவனும் சிரத்தையாகப் படிக்கிறான்...!'' என்று சொல்லிக்கொண்டே நித்தியானந்தத்தின் நண்பர் சிவானந்தம், சோபாவில் உட்கார்ந்தார்.

''வாங்க மிஸ்டர் சிவானந்தம்! என்ன கவலை என்று கேட்கிறீர்களே? என் மகன் புருஷோத்தமனைப் பற்றித்தான் என் கவலையெல்லாம். அவன் நன்றாகப் படிக்கிறான். வாஸ்தவம்தான். ஆனால் குடும்பப் பொறுப்பே இல்லை. இன்னும் குழந்தையாகவே இருக்கிறான். என் தொழிற்சாலையையும் சொத்தையும் இவன்தானே எனக்குப் பின்னால் ஏற்றுச் சமாளிக்க வேண்டும்?''

''அது சரி. ஆனால் பொறுப்பில்லாமல் என்ன செய்கிறான்?''

''இந்தப் பங்களா, கார், தோட்டம் எல்லாமே அவனுக்கு ஒரு பொருட்டில்லை. எதிலுமே அவனுக்குப் பற்றும் இல்லை; பாசமும் இல்லை. இத்தனைக்கும் அவனுக்கு நான் எந்தத் தேவையும் வைப்பதில்லை. அப்படியிருந்தும் அவனுக்கு எதிலும் அக்கறையில்லை. அதுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது..'' என்றார் நித்தியானந்தம்.

சிவானந்தம் சற்று யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

''மிஸ்டர் நித்யானந்தம்! இப்பொழுது தான் உங்கள் தவறு எனக்குப் புரிகிறது. அவன் வயது வந்த பையன். இன்னும் குழந்தை இல்லை. அவனை நீங்கள் நடத்தும் விதம் சரியில்லை...''

''என்ன, நான் அவனை நடத்தும் விதம் சரியில்லையா? என் பர்ஸனல் அஸிஸ்டெண்டிடம் சொல்லி அவனுடைய தேவைகளை உடனுக்குடன் கவனிக்கச் சொல்லியிருக்கிறேன். என் மகன் புருஷோத்தமன் வாய் திறந்து கேட்கும்வரையில் அவன் காத்திருப்பதில்லை. அவனாகவே அவனது தேவைகளையெல்லாம் அறிந்து கொண்டு பூர்த்தி செய்து விடுகிறான்!''

''தவறே அதில்தான் இருக்கிறது, நித்தியானந்தம்! உங்கள் பிள்ளைக்கு உங்கள் சொத்துக்களின் மீது அக்கறை யில்லாமல் போனதற்குக் காரணம் நீங்களேதான்!''

''நீங்கள் சொல்வது புரியவில்லையே, சிவானந்தம்! நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

''இதுவரை அவன் தேவைகளை அவனைக் கேட்காமலே பூர்த்தி செய்து வந்ததை இன்றோடு நிறுத்தி விடுங்கள். அவன் தேவையை அவனே உணரும்படியான சந்தர்ப்பத்தை அவனுக்கு அளியுங்கள். அத்துடன் அவனே அதற்காகச் சிரமப்பட்டுப் பொறுப்பு எடுத்துக்கொண்டு உழைக்கும்படி செய்யுங்கள். அப்புறம் பாருங்கள்!''

''சரி. புருஷோத்தமன் தனக்கு ஸ்கூட்டர் வேண்டுமென்று ஆசைப்படுகிறான். அதற்காக மனுச் செய்தால் மிகத் தாமதமாக வரும். குறுக்கு வழியில் நுழைந்தால் சீக்கிரம் கிடைக்கலாம். அதற்கு முயற்சி செய்யலாம் என்றிருக்கிறேன். நீங்கள் என்னசொல்கிறீர்கள்?''

''தயவுசெய்து அந்த முயற்சியை நிறுத்தி விடுங்கள். புருஷோத்தமன் தானாக உங்களைக் கேட்கும் வரையில் ஸ்கூட்டர் பற்றிய பேச்சையே எடுக்காதீர்கள். உங்கள் பர்ஸனல் அஸிஸ்டெண்டிடமும் இது விஷயமாகக் கண்டிப்பாய் இருக்கச் சொல்லுங்கள். ஸ்கூட்டருக்காக அவனே மனுச் செய்து சிரமப்படும்படியான அவசியத்தை ஏற்படுத்தி விடுங்கள். அப்புறம் பாருங்கள்!''

புருஷோத்தமனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. தான் எதை நினைத்தாலும் வாய் திறந்து கேட்காமலே வாங்கித் தரும் அப்பா இந்த ஸ்கூட்டர் விஷயத்தில் மட்டும் அசிரத்தையாக இருப்பதன் காரணம் விளங்கவில்லை. அப்பாவின் பர்ஸனல் அஸிஸ்டெண்டிடம் கூச்சத்தை விட்டு ஸ்கூட்டரைப் பற்றிப் பிரஸ்தாபித்தான். ஏனோ அவருக்கும் ஸ்கூட்டர் விஷயத்தில் அக்கறை இல்லை. 'இப்பொழுது மனுச் செய்தால் வருஷக் கணக்கில் காத்திருந்தால் தான் கிடைக்கும். பார்க்கலாம்' என்று கூறி விட்டார்.

மறுநாளே புருஷோத்தமன் ஸ்கூட்டருக்காக மனு எழுதித் தபாலில் சேர்த்தான். பிறகு ஓயாமல் அலைந்தான், யாரை யெல்லாமோ போய்ப் பார்த்தான். ஸ்கூட்டருக்காக அவன் படும் அவஸ்தைகளைப் பார்த்து நித்தியானந்தம் வியந்து போனார். நண்பர் சிவானந்தத்தின் கண்டிப்பான உத்தரவுக்குக் கட்டுப் பட்டு அவர் மௌனமாக இருந்தார்.





புருஷோத்தமனின் இடைவிடாத முயற்சி வீண் போகவில்லை. ஒரு வருஷத்தில் அவனுக்கு ஸ்கூட்டர் கிடைத்து விட்டது. ஸ்கூட்டர் வந்ததிலிருந்து புருஷோத்தமனுக்கு உற்சாகம் பிடிபடவில்லை. அதில் ஏறி ஓட்ட விரைவில் பயிற்சி பெற்று விட்டான்.

ஒரு நாள் காலை. வழக்கம்போல் புருஷோத்தமன் பங்களா வாசலில் அக்கறையாக ஸ்கூட்டரைத் துடைத்துக் கொண்டிருந்தான்.

அப்பொழுதுதான் வெளியே யிருந்து காரில் வாசலில் வந்திறங்கிய நித்தியானந்தமும், சிவானந்தமும் புருஷோத்தமன் கருகருப்பாக ஸ்கூட்டரைத் துடைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டு நின்றனர். கார் வந்ததையோ, அதிலிருந்து அப்பாவும் அவர் நண்பர் சிவானந்தமும் இறங்கினதையோ, பிறகு அவர்கள் தன்னையே கவனித்துக் கொண்டிருப்பதையோ புருஷோத்தமன் கவனித்ததாகத் தெரியவில்லை. அவன் மிகவும் கவாரசியமாக ஸ்கூட்டரைத் துடைத்துக் கொண்டிருந்தான்.

''பார்த்தாயா நித்யானந்தம்?'' என்று கேட்டார் சிவானந்தம் பூரிப்போடு.



# "வனஜா காத்திருப்பாள்!"

விஜயம்

''பார்த்தேன்! என் கண்களை என்னுலேயே நம்ப முடியவில்லே. எத்தனே கரிசனம் ஸ்கூட்டர் மீது! எப்படிப் பட்டாகத் துடைக்கிருன் விட்டேத்தியாக இருக்கும் என் மகன்! புருஷோத்தமனை இத்தனே பொறுப்புணர்ச்சியோடு நடந்து கொள்கிருன்!''

''எல்லாத்துக்கும் நான் சொன்னதுதான் காரணம். அவனே ஸ்கூட்டருக்காக அலேந்து திரிந்து கஷ்டப்பட்டான் இல்லேயா? அதனுல் அதன் அருமை தெரிகிறது. இதே போல் எல்லாக் காரியங்களிலும் அவன் கொஞ்சம் சிரமப்படட்டும். அவன் என் என்பதற்கு முன் நீ எண்ணெயாக நிற்காமல் அதற்குப் பதில் எது வேண்டுமானுலும் அதற்காக உழைத்தால்தான் கிடைக்கும் என்ற நிலேயை அவனுக்கு ஏற்படுத்து. அப்புறம் உன் மகனுக்கு ஈடான வாலிபனே வேறு ஒருத்தன் இருக்க மாட்டான். புரிந்ததா?'' இப்படிக் கேட்டுக் கொண்டே சிவானந்தம் புருஷோத்தமனே அணுகினுர். ''என்ன புருஷோத்தமா! இந்தப் பங்களாவில் வேலேயாளுக்கா பஞ்சம்? யாரையாவது ஸ்கூட்டரைத் துடைக்கச் சொல்லுகிறதுதானே?'' என்று கேட்டார்.

''இல்லே மாமா! வேலேயாள் சரியாகத் துடைக்க மாட்டான். அதனுல்தான் நானே துடைக்கிறேன்'' என்றுன் புருஷோத்தமன். தொடர்ந்து, ''இதோ பாருங்கள், இந்தப் பின் சக்கரத்திலே எத்தனே கிரீஸ் பிசுக்கு கறுப்பாக. இதிலே வனஜாவின் காலிக்னாத் புடவை பட்டால் வீணுகப் போய்விடும். அப்புறம் அவள் என்னே மன்னிக்கவே மாட்டாள்!'' என்றுன்.

''என்னது வனஜாவா? யார் அது வனஜா?'' என்று படபடத்துக் கேட்டார் நித்யானந்தம்.

''அவள் ஒரு டெலிபோன் ஆபரேட்டர். நான் ஸ்கூட்டருக்காகப் பல இடங்களுக்குப் போய்ச் சொரிக பிடித்து அலேந்த சமயம் அவளேச் சந்தித்தேன்.''

''ஐயையோ! வேண்டாம்டா; நல்ல பெரிய இடமாகப் பார்த்து நான் உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கிறேன்டா'' என்று நாத் தழுதழுக்கப் பேசினுர் நித்யானந்தம்.

''சேச்சே! பெரிய இடமாவது சின்ன இடமாவது? வனஜா ஏழைதான்; ஆனுல் அவள் என் உள்ளம் கவர்ந்தவளாச்சே'' என்றுன் புருஷோத்தமன். ''சொல்லப் போனுல் அவள் நம்ப ஜாதிகூட இல்லே. ஆனுல் இந்த நாளில் அதையெல்லாம் யார் பார்க்கிருர்கள்?''

''அட கடவுளே! நம்ப குடும்ப கௌரவத்தைக் கப்பல் ஏற்றிவிடாதேடா'' என்று கெஞ்சுவது போல் நித்யானந்தம் கூறிய வார்த்தைகள் ஸ்கூட்டர் கிளம்பிய போது போட்ட சத்தத்தில் அடங்கிப் போயின.

''வனஜா சுவிமிங் ஷோ போகக் காத்திண்டிருப்பாள். நான் சீக்கிரம் போகணும்'' என்று உரக்கக் கத்தியபடியே புருஷோத்தமன் ஸ்கூட்டரைச் செலுத்திக் கொண்டு போய்விட்டான்.

நித்யானந்தத்தின் துயரம் சிவானந்தத்தின் மீது ஆத்திரமாக மாறியது.

''ஓய்! உம்முடைய யோசனையைக் கேட்டதால் வந்த வினேயைப் பார்த்தீரா?'' என்று கடுகடுத்துக் கொண்டே திரும்பினுர்.

பதில் சொல்ல அங்கு சிவானந்தம் இருந்தால்தானே? அவர் அங்கிருந்து நழுவிப்போய் விடுவிடுவென்று வீதி முனேவரையில் நடந்து விட்டிருந்தார்!



''அடேயப்பா! காலேஜுக்கு இத்தனே புத்தகமா?''

''ஆமாம்! உலக சரித்திரம், துப்பறியும் கதை, உண்மையில் நடந்த கதை, சரத் நாவல், இண்டியன் ஹிஸ்டரி, சிறுகதைத் தொகுப்பு, ஸ்பெண்டிங் செய்த தொடர்கதை, சமூகக் கதை, நாடகம், சிருங்காரக் கதை, ஸாஜிக...''




''பிரசவக் கட்டணம் ஐம்பது ரூபாய் என்றீர்கள், இப்ப நூறு ரூபாய் கேட்கிறீர்களே அம்மா!''

''என் கணவர் நர்ஸரி ஸ்கூல் நடத்துகிருர். உங்க குழந்தைக்கான முதல் மாத டியூஷன் பீஸையும் சேர்த்துச் சொன்னேன். அப்புறம் இடம் கிடைக்குமோ என்னமோ? இப்பவே ரிஸர்வ் பண்ணிக் கொள்ளுங்கள்.''



அமெரிக்க பாங்கு சிலவற்றில் கண் பார்வை இல்லாதவர்களும் கணக்கு வைத்துக் கொள்ளலாம்.

கண்ணில்லாதவர்களுக்குப் பாங்க் வசதியாக 'பிரெய்லி' முறையில் கணக்கு விவரங்களை வழங்குகிறார்கள்.

- ஏ. சுவாமிநாதன்

## 'தேவன்' திணறிப் போனார்!

நண்பர் ஒருவர் தேவனைத் தம் வீட்டுக்குச் சாப்பிட வரும்படி வற்புறுத்தி அழைத்தார். நண்பரின் தாயார் பரிமாறத் தொடங்கினார். தேவனுடைய இலையில் கத்தரிக்காய்க் கறியை அதிகமாகவே போட்டாள். அடிக்கடி பரிமாறினார்.

தேவன், கத்தரிக்காய்க் கறியைத் தொடவில்லை.

பரிமாறிய அம்மாள், "சாப்பிடுங்கள்! கத்தரிக்காய்க் கறி உங்களுக்குப் பிடிக்கும் என்பதற்காகவே நல்ல கத்தரிக்காய்களாகப் பொறுக்கி வாங்கினோம்! நன்றாகப் பக்குவம் செய்திருக்கிறோம்!" என்றார்.

தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "நான் அப்படி யாரிடமும் சொல்லவில்லையே!" என்றார் நண்பரிடம்.

"நீங்கள் இதையெல்லாம் சொல்ல வேண்டுமா என்ன? எங்களுக்குத் தெரியாதா? நீங்கள் எழுதிய 'துப்பறியும் சாம்பு' கதையில் வேம்பு அடிக்கடி என்ன சமைத்துப் போடுகிறாள்? கத்தரிக்காய்க் கறிதானே?"

"அடடா! பாவமே! சாம்புவுக்குக் கத்தரிக்காய் பிடித்திருக்கலாம். கதையை எழுதினவனுக்கும் பிடித்திருக்க வேண்டுமென்பது அவசியம் இல்லையே!" என்றார் தேவன்.

அந்த வீட்டார் இதை ஒப்புக் கொள்ள மறுத்து விட்டார்கள்!

அன்றையச் சாப்பாட்டில் தேவன் திணறிப் போய், பின்னர் வீடு திரும்ப நேரிட்டது.

(சென்னை வானொலி நிலையத்தில் 'எனது சில கதா பாத்திரங்கள்' என்ற தலைப்பில் திரு தேவன் பேசியபோது கூறியது.)

- ஏ. சுவாமிநாதன்





"உலகிலேயே மிகவும் சுத்தமான நகரம் சிங்கப்பூர். மிகவும் அசுத்தமான நகரம் சென்னை" என்று மால்கம் ஆதிசேஷய்யா சொல்லியிருக்கிறார். தர்மத் - பாபு

## மொழிபெயர்ப்பில் ஒரு சோதனை!

குறிப்பிட்ட ஒரு வாசகம் அயல் மொழியில் பெயர்க்கப்படும்போது அதன் பொருள் எவ்வாறு மாறுகிறது என்பதைக் கண்டறியப் பின் கண்ட சோதனை நடத்தப்பட்டது.

பல்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்த பதினொன்று மொழி



பெயர்ப்பு நிபுணர்கள் ஒவ்வொருவருக்கும் தமது வலதுபுறத்தில் இருப்பவரின் மொழி தெரிந்திருக்கும் வகையில் ஒரு வட்ட மேஜையைச் சுற்றிலும் உட்கார வைக்கப்பட்டனர்.

பிறகு "மனிதகுல வரலாறு எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானது பீர் காய்ச்சும் தொழிலும்" என்ற வாசகத்தை எழுதிக் கொள்ளும்படி முதலாவது மொழிபெயர்ப்பாளரான ஜெர்மானியரிடம் கூறப்பட்டது.

இந்த வாசகத்தை ஒவ்வொரு மொழிபெயர்ப்பாளரும் ஒருவர் பின் ஒருவராக வெவ்வேறு மொழியில் பெயர்த்தனர்.

இவ்வாறு அந்த வாசகம் எல்லா மொழிபெயர்ப்பாளர்களையும் சுற்றிக்கொண்டு, மூல வாசகத்தை வைத்துள்ள ஜெர்மன் மொழிபெயர்ப்பாளரிடம் ஆங்கிலேய மொழியில் வந்து சேர்ந்தபோது அதில் எழுதப்பட்டிருந்ததைக் கண்டு அவர் திகைத்துப் போய்விட்டார்! அந்த வாசகத்தில் இவ்வாறு கண்டிருந்தது: "நீண்ட நெடுங் காலமாகவே பீர் மனித குலத்துக்குப் பிடித்தமான மதுபானங்களில் ஒன்றாக இருந்து வந்துள்ளது!"

ஆதாரம்: சோவியத் நாடு. - தகவல்: என். எஸ். நாதன்



"இந்தக் கம்ப்யூட்டர் மனிதனைப் போன்றது!"

"எப்படி, தப்பு செய்யுமா?"

"அதுமட்டுமல்ல; தான் செய்த தப்பைப் பக்கத்தில் உள்ள கம்ப்யூட்டர் தலையில் கட்டிவிடும்." லயன் - 'பாலி'

கொம்பு ஊதி முரசங்கள் கொக்கரித்தன. பாரி மன்னர் விடைபெறும் போதும் மீண்டும் சொன்னான்: ''தேவி! பகையை விரும்பாதவன் நான். புவனம் முழுவதும் அமைதியை யாசிக்கும் போது, நியாயமான ஒன்றை யாசிப்பவர்க்கு இல்லையெனாது வழங்கும் நான் மட்டும் புறம்பாக நிற்பேனா? பாண்டியனே என்னிடம் யாசகம் கேட்டு வந்தான். இந்தப் பறம்பு நாட்டையே கேட்டிருந்தாலும் பதற்றமின்றி வழங்கியிருப்பேன். விருப்பமற்ற என் மகள் அங்கவையை அல்லவோ அந்தப் பாண்டிக் கிழம் தானமாகக் கேட்கிறான்! இது எந்த வகையில் நியாயம்? விருப்பமில்லாத மகளுடைய மனத்தைப் பிடுங்கித் தானமாகக் கேட்க எனக்கு என்ன உரிமை இருக்கிறது? நான் மகளுக்கு உரிமையுள்ள தந்தை; அவளுடைய மனத்துக்கல்லவே! மறுத்ததற்குப் போர் என்றால் என்னுடைய வீரர்கள் கோழையாகிவிட முடியுமா, தேவி?''

''பறம்பு நாடு காணும் முதல் போர் இது! வரலாற்றில் வெற்றி முத்திரை விழட்டும்.''



அரசியின் இதழ்களில் நிறைவு முத்திரை யிட்டது. அடுத்த ஒரு நாழிகைப் போதில் போர்ப் பயணமும் தொடங்கியது.

பறம்பு மலைச்சரிவின் வழியாகப் படைகள் வீராவேசத்துடன் வந்து கொண்டிருந்தன. ஆயிரமாயிரம் வீரர்கள்; ஆயிரமாயிரம் கரிகள்; பரிகள்; கணக்கற்ற தேர்கள் ! இத்தனையும் கண்டு இறுமாந்து வாழ்த்தினர், முந்நூறே ஊர்களைக் கொண்ட பறம்புமலை மக்கள் !

மலைப் பாம்பைப் போல் பறம்புப் படைகள் வளைந்து வளைந்து மலைச் சரிவின் வழியாக வந்து கொண்டிருந்தன. அந்தக் காட்சியைக் கண்ட மக்கள், தங்கள் மன்னன் செய்த தருமம்தான் தலைகாக்கும் பொருட்டுக் காலனாக உருக்கொண்டு தீமையை அழிக்கப் புறப்பட்டு விட்டதோ என்று கருதினர். கடையேழு வள்ளல்களுள் தலையான வள்ளலாயிற்றே வேள்பாரி !

போர்ப் பயணம் நீண்டு கொண்டே யிருந்தது. பொன் வேய்ந்த தேரில் போர்க்கோல வீரத்துடன் அமர்ந்து காணப்பட்டான், மன்னன் பாரி! அப்போது —

திடும்மென்று பாரியின் கண்களில் ஒரு திகைப்பு; இமைகள் படபடத்தன. இதயம் ஒரு கணம் நின்று மறுகணம் துடிக்கத் தொடங்கியது. அடுத்து, கணமும் தாமதியாமல் தேரிலிருந்து குதித்தான் பாரி. அங்கே-

பாதையிலே ஒரு பசுங் கொடி! தக்க கணவனைப் பெறாத காரணத்தால் தளிர்மேனி இளமை குன்றித் தவிக்கும் கன்னிப் பெண்ணொருத்தியின் தவிப்பு போலக் காணப்பட்டது அந்த முல்லைக் கொடி! பாதையை மறித்துப் படர்ந்த அந்தக் கொடியைக் காணக் காண வள்ளல் பாரியின் நெஞ்சு இரக்கத்தால் கசிந்து கொண்டிருந்தது. முல்லைவனம் காணும் பறம்பு மண்ணில், முல்லைத் தேவதையொருத்தி கேட்பாரற்றுப் பாதையில் விழுந்து கிடப்பது போலக் காணப்படுகிறதே இந்தக் கொடி? போர்க்களம் நோக்கிச் செல்கிற இந்த நேரத்தில் இது எத்துணைக்குக் கொடிய காட்சியாகத் தெரிகிறது...!

வெகுநேரத்துக்கு வெகு நேரமாகச் சிந்தித்தான் பாரி மன்னன். அவனுடைய சிந்தனைக்குத் தெளிவாக எதுவும் புலனாகவில்லை. முல்லையென்றால் பாரிக்கே முழுக் கவனமாயிற்றே ! அது ஓர் அநாதை அழகு போலப் பாதையில் படுத்திருக்கிறதே!

அதற்குள் சேனைத் தலைவன் புரவியைத் திருப்பிக் கொண்டு மன்னன் அருகே வந்து நின்றான். பாதையில் படுத்திருக்கும் முல்லைக் கொடியைக் கண்டதும் அவனுக்குப் புரிந்து விட்டது.

''மன்னர் பிரானே ! கொடியை அகற்றி விட்டுப் பயணத்தைத் தொடரலாமே !''

சேனைத் தவமன்றி வேறு மோனத் தவமறியாச் சேனைத் தலைவனை உற்று நோக்கிய மன்னன், பொருள் பொதிந்த புன்னகையுடன், ''கொடியை அகற்றி விட்டால் பிறகு போர்ப் பயணம் எதற்கு? வெற்றி முரசம் எதற்கு?'' என்றான். இந்த இரு பொருள படக் கூறிய சொல்லாட்சியின் உட்பொருளைச் சேனைத் தலைவன் புரிந்து கொண்டு மௌனமானான்.

சற்றைக்கெல்லாம் பாரியின் நெஞ்சில் என்ன உதயம் கண்டதோ, கொஞ்சமும் தாமதியாமல் கையிலிருந்த வெற்றி வேலைப் பாதையோரமாக அழுந்த ஊன்றி நட்டு வித்தான். அடுத்து முல்லைக் கொடியை அன்புடன் இரு கரங்களாலும் தழுவி எடுத்து, நட்டுவித்த வேலின் மீது படரச் செய்து மகிழ்ந்தான். கொழு கொம்பு கிடைத்த முல்லைக் கொடி மோகனமாய்ச் சிரித்தது. அதே நேரத்தில் மன்னன் பாரியின் இதயத்திலும் ஏதோ முனகல் கேட்டது. அந்த முனகலை அறியக்கூடிய செவிப் புலன் முல்லைக் கொடிக்கு மட்டுமே இருந்தது போலும் ! அப்படி இல்லையென்றால், அது கொடியசைத்து முறுவலித்து, 'சென்று வா, மன்னவா ! வென்று வா, மதுரையை !' என்று கூறாமல் கூறி யிருக்க முடியுமா ?

பாரியின் கண்களில் படர்ந்தது நீர்த்திரை! எதைக் குறித்தோ? எதை வரித்தோ ?

மனத்தில் எண்ணங்களைச் சுமந்த பாரி மன்னனை, மணித் தேர் சுமந்து புறப்பட்டது!

பாரிப் பறம்பின் பனிச்சுனைத் தண்ணீரை வாரியருந்தின் வாய் மணக்கும் என்பார்கள் ! பனிச்சுனை தானா வாய் மணக்கும்? இதோ படைச்சுனையும் வெற்றி மணக்கப் பாய்ந்து கொண்டிருக்கிறது !

மலையைச் சுற்றி முற்றுகையிட்டிருந்த மதுரைப் படைகள் பிடரியில் மண்பட ஓட்டம் பிடிக்கின்றன! பறம்பு வீரர்கள் பாண்டிய வீரர்களைப் பதைபதைக்க விரட்டி அடிக்கின்றனர்; முன்னேறுகின்றனர். கோட்டையைப் பிடிப்பதோடு மட்டுமல்லாது சேட்டை செய்த பாண்டிய மன்னனின் உடற் கூட்டையும் பிடித்துவிட வேண்டும் என்கிற வஞ்சினம் கொண்ட வைர நெஞ்சத்துடன் பாரியின் வீரர்கள் பாய்ந்தோடுகின்றனர்!

கோட்டை பிடிபட்டது ; பாண்டியனைக் கோட்டை விட்டு விட்டார்கள்! ஆனாலும் அவனுடைய விலையுயர்ந்த கொடித் தேர் பிடிபட்டது !

''என்ன பயன்?'' என்று சேனைத் தலைவன் உறுமினான் !

''அதுவே பயன் !'' என்று ஆறுதல் சொன்னான் மன்னன் பாரி ! வெற்றி முரசம் முழங்குகிறதே, அது போதாதா ?

கெடுமதியால் படுகுழியில் விழுந்த பாண்டியனை எண்ணி அழுவதா, சிரிப்பதா என்றே தோன்றவில்லை, மன்னன் பாரிக்கு ! பகை விரும்பாப் பாரி! கொடை மடமன்றிப் படை மடம் படுவானோ?

பாண்டிய நாடு பறம்பிடம் பட்டது ! தருமம் மணக்கும் பாரியின் ஆட்சியைத் தமிழ் மணக்கும் பாண்டிய மக்கள் விரும்பி வரவேற்றனர் ! ஆனால் பாண்டியன் நிலை ?

அழுச் சிந்தனை உள்ளவர்களைப் புழுச் சிந்தனை உள்ளவர்கள் எளிதில் ஏமாற்றி விடலாம் என்பார்கள். பாண்டியனின்




''அன்பர்களே! நண்பர்களே! என் எதிரில் என் உருவப் படத்தைத் திறப்பு விழா செய்யாதீர்கள்! அது எனக்கு என்னவோ போலிருக்கு! கண்ணை மூடிக் கொள்கிறேன். விழாவை ஜாம் ஜாமென்று கொண்டாடுங்கள்!''

சதுரங்கத்துக்குப் படைத் தமிழ்ப் புலவர் கபிலர் காயானார் !

வெற்றிச் சங்கம் இன்னும் ஓயவில்லை.

வேர்த்து வெலவெலத்து ஓடி வந்தார் புலவர் கபிலர். தமிழின் தலையான புலவர்களுள் நிலையானவராயிற்றே அவர் !

'' நீதான் பாரி மன்னனோ?'' — கன்றா கண்களும் கழி தளர்ந்த நாவசைவுமாகக் கேட்டார் கபிலர்.

உற்று நோக்கி ஒரு கணம் சிந்தித்த பாரி, ''நீங்கள் யாரோ?'' என்றான் பணிவன்புடன். ''எனக்கும் அளவுக்கு நான் செய்த பிழை?''

''தமிழை வென்றது!''

''தமிழை வெல்ல நான் யார்? புலமையில் வாசமற்றவன் !''

''நான் பாண்டியனைக் குறிப்பிடுகிறேன்.''

''பாண்டியன் தமிழ் அல்ல; மன்னன்.''

''மதுரையில் தமிழ் வளர்த்த மரபினன்.''

''பாண்டியனிலும் மேலாகப் பாரி வளர்ப்பான் !''

'' இல்லை, தானமாகக் கொடுத்துவிடுவான் !''

''பாரிக்குத் தானத்தில் நிதானம் உண்டு. இல்லையென்றால் பாண்டியனைப் பகைப்பானா ? சொந்த மகள்தான் அங்கவை. அவளைத் தானமாகக் கொடுக்க இந்தப் பாரியால் முடியவில்லையே !''

பாரியின் இதம் தோய்ந்த அழுத்தமான சொற்கள் கபிலருடைய நெஞ்சை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது. பாரியைப் பற்றி அவர் பலவாறு அறிந்திருந்தார். முதன் முறையாக நேரில் காணுகிறாரே !

கபிலரின் தயக்கத்தைக் கண்ட மன்னன் பாரி, ''பெரியவரே ! தங்களை யார் என்று உணராது இதுவரையில் தாங்கள் கேட்டு வந்த நெருப்புச் சொற்களுக்கு, குளிர்ந்த விடையளித்து வந்தேன். ஆனாலும் பாண்டிய நாடு இப்போது பாரியின் நாடு. என்றாலும் நிதானம் இழக்கவில்லை'' என்றான்.

மீண்டும் பாரி வினவினான்: ''ஐயா, தாங்கள் யாரோ ?''

''கபிலன் !''

மறுகணம் —

நெடுஞ்சாண்கிடையாகக் கழல் பணிந்தான் பாரி. ''தமிழே என்னைச் சோதிக்க வந்ததா? தமிழை வெல்ல நான் யார் ?''

''எழுக பாரி, எழுக ! பாண்டியனே குற்றம் புரிந்தவன். இதனை உணராது அவன் பொருட்டுத் தூது வந்து விட்டேன்!''

''தூது வந்தீர்களா? தூது வெற்றி பெறட்டும் !''

''பாரி....!''

''வியக்காமல் வந்த பொருள் பற்றிப் பேசலாம்.''

''மன்னா! நான் வந்தது வெறும் தூதல்ல, யாசகத் தூது. கொடுத்த வாக்கை என்றால் விடுத்து விலக முடியவில்லை. தமிழ் வளரும் சங்கத்தின் மீது ஆணையிட்டுக் கேட்டு விட்டான் மீனவன்!''

''புரிகிறது, கபிலரே, புரிகிறது. ஆண்ட மதுரையை மீண்டும் கேட்கிறானே பாண்டியன்! பாரியால் கொடுக்கக் கூடியது ஒன்றுதான்! அதுவும் தமிழ் என்னைத் தானம் கேட்கிறது. இதுவரையில் கேட்காத ஒன்று. புலவரே! பாண்டிய நாட்டின் ஒரே ஒரு பொருளை ஏற்கனவே ஒன்றுக்குத் தானமாக்கி விட்டேன். அந்த ஒன்றை நீக்கி ஏனைய அனைத்தையும் தங்கள் பொருட்டுப் பாண்டியனுக்குத் தானமாக அளித்து விட்டேன்!''

கபிலருடைய கண்கள் கலகலத்து விட்டன. பாரிக்குத்தான் எத்தனை பெரிய இதயம் !

''வள்ளல் பெருந்தகையே! வாழ்க நீ ! பாரி ! அந்த ஒன்றை — நீ எடுத்துக் கொண்ட ஒன்றைப் பற்றி நான் அறியலாமா ?''

''ஆகா ! பாண்டியனின் மணித் தேர் !''

''தேர் !''

''ஆமாம்; நான் படை திரட்டி வருகையில் பாதையில் ஒரு முல்லைக் கொடி படரக் காம்பின்றி வழி மறித்தது. 'பாரி மன்னா! நீ பாண்டிய நாட்டை வெற்றி கொண்டால் பாண்டியனுடைய மணித் தேரைப் பந்தலாகக் கொண்டு வந்து நிறுத்துவாயா ?' என்று கேட்பது போல் என் மனத்துக்குப் பட்டது. நானும் அவ்வண்ணமே வாக்களித்து, என் கையில் இருந்த வெற்றி வேலைத் தரையில் ஊன்றி நட்டு ஆணையிட்டு அதன் மீது படரச் செய்தேன். அது மட்டுமல்ல, ஒரு கால் நான் தோற்றுப் போனால்..''

பாரியின் கண்கள் இப்போது கலங்கின. ''நான் தோற்றுப் போனால், என் பிணத்தைத் தழுவிக் கொள்' என்றேன்!''

உடல் முழுதும் புல்லரிப்புக் கண்ட புலவர் கபிலர், உணர்ச்சி வயப்பட்டு, ''பாரி! உன்னை வள்ளலாக எல்லாருமே பார்க்கின்றனர். நானோ ஒரு மனிதனைப் பார்க்கிறேன். இந்த உலகில் முல்லை சிரிக்கும் வரை உன் பெயர் விளங்கும்; மணக்கும்!'' என்று வாழ்த்திச் சேர்த்து அணைத்துக் கொண்டார்.

வெற்றி முழக்கத்தோடு பறம்புப் படைகள் திரும்பின. வழியில் —

பாண்டியன் தேரைப் பந்தலாகக் கொண்டு படர்ந்த முல்லைக் கொடியைக் கையெடுத்துக் கும்பிட்டான் பாரி மன்னன்.

'' பாரி! உன் வணக்கத்துக்குக் காரணம்?'' — கபிலர் கேட்டார்.

''முல்லை, தன்னைவிட மணமிக்க தமிழை எனக்குக் கொடுத்து விட்டது!'' என்று கூறிக் கபிலரை உற்று நோக்கினான் பாரி. மனிதனைக் கண்டுவிட்ட மகிழ்ச்சி கரை புரள மாப்புலவர் கபிலர் சொன்னார்: ''பாரி! நீ தமிழையே வென்று விட்டாய்!''

தலை வணங்கினான் தலையான வள்ளல்.

# உல்லாசப் பயணம்!



நீண்ட நாட்களாக மனத்தில் உறுத்திக் கொண்டிருந்த அந்தப் பிரச்னைக்கு முடிவைக் கண்டுவிட்ட மகிழ்ச்சியில் வீட்டுக்குத் திரும்பினான் சேகர்.

கர்ப்பியைச் சாப்பிட்டுக் கொண்டே தனது திட்டத்தை மனைவியிடம் விவரிக்கலானான்.

''இதோ பார், என்னுடைய இட்டப்படி நாம் இருவரும், மாலா, கிதா — இரு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு உடனே ஊர்களுக்குக் கிளம்ப வேண்டும். குழந்தைகளுக்கும் லீவு விட்டு விட்டார்கள். சரியாக எண்ணி நான்கு வாரங்கள் வெளியூர் வாசம்.''

''ஆமாம், திடீர்னு இப்படிச் சொன்னால் எப்படி? இதற்கெல்லாம் பணம் ஏது? அது மட்டுமல்ல, கழுத்தில் சங்கிலி இல்லாமல் நான் வெளியே கிளம்ப முடியாது. எவ்வளவு நாட்கள்தான் பொறுத்துக் கொள்வது? குழந்தைகளுக்குக் கூடச் சரியானபடி துணி மணி இல்லை. போகட்டும்; திடீரென்று ஊரில் போய் நின்றால் அவர்களுக்கெல்லாம் என்ன காரணம் சொல்வது?''

'' ஏய்! பேசிக் கொண்டே போகாதே. இதையெல்லாம் பற்றிப் படிப்படியாக ஒரு மாதம் யோசனை செய்துதான் இந்தத் தீர்மானத்துக்கு வந்திருக்கிறேன். என் இஷ்டப்படி இந்தப் பயணம் நடைபெற்றால் உன் சங்கிலி வந்து சேரும்; குழந்தைகளுக்குத் துணி மணிகள் வாங்கலாம். அது போகட்டும், ஊர்களைச் சொல்லு. முதலில் கும்பகோணத்திலுள்ள என் சித்தப்பா வீடு. நீண்ட நாட்களாக எட்டியே பார்ப்பதில்லை என்று அவர் கோபமாக இருக்கிறார். அவர் கோபத்தை முதலில் தணிக்க வேண்டும். அடுத்துத் தஞ்சாவூரில் பெரியம்மா வீடு; சொந்த வீடு; குழந்தை குட்டி கிடையாது. ஒண்டிக்கட்டை. நாம் போய் வீட்டையே கலகலப்பாக வைத்துக் கொள்வோம்.''

''கலக்காமல் இருந்தால்சரி.''

''ஏய், கேலி இருக்கட்டும்; இரண்டு வார ஏற்பாட்டைச் சொல்லி விட்டேன். அடுத்த இரண்டு வாரப் பொறுப்பு உன்னுடையது.''

'' அவ்வளவு தூரம் போய் விட்டுத் திருச்சியில் உள்ள எங்க சித்தி வீட்டுக்குப் போகாவிட்டால் சும்மாவிடமாட்டார்கள். திருச்சியில் ஒரு வாரம் தங்கி விட்டு, அங்கேயிருந்து திருவண்ணாமலையில் எங்கள் அண்ணா வீட்டுக்கு வந்து விடலாம். மன்னிக்கு என்றைக்கும் என்பேரில் பிரியம். அது சரி, இப்போ திடீர்னு பணத்துக்கு என்ன செய்வேள்? என் சங்கிலி?''





''அந்த அநாவசியக் கவலைகள் எல்லாம் உனக்கு எதற்கு? இந்தப் பயணம் வெற்றிகரமாக முடிந்தால் உன் சங்கிலிப் பிரச்னையெல்லாம் தானே சரியாகி விடும். அதெல்லாம் போகப் போகச் சொல்கிறேன். சரி, இன்றைக்கே எல்லோருக்கும் முறைப்படி கடிதம் எழுதி விடுகிறேன். நாளை இரவு ராமேசுவரம் எக்ஸ்பிரஸில் முதலில் கும்பகோணத்துக்குப் புறப்படுகிறோம். ஞாபகம் இருக்கட்டும். எல்லாவற்றையும் தயாராக எடுத்து வைத்துக் கொள்.''

மறுநாள் சேகர் வரும்போதே டாக்ஸியை அழைத்து வந்துவிட்டான். வீட்டைப் பூட்டிவிட்டு அத்துடன் தங்கள் குடும்பப் பிரச்னைகளையும் உள்ளே தள்ளிவிட்டு, மகிழ்ச்சியுடன் கிளம்பினர் அந்தக் குடும்பத்தினர்.

வண்டி ஓடிக் கொண்டிருந்தது. குழந்தைகள் இருவரும் தூங்கி விழுந்து கொண்டிருந்தார்கள். சேகரும் கோமதியும் மெல்லிய குரலில் உரையாடிக் கொண்டிருந்தனர்.

''இதோ பார் கோமதி, அலுவலகத்துக்கு ஒரு மாத லீவு போட்டால் சம்பளத்தை அட்வான்ஸாக வாங்கிக் கொள்ளலாம். அரசாங்கத்தில் பணி புரிபவர்களுக்கு அப்படி ஒரு சலுகை. ஒரு மாதச் சம்பளம் இதோ என் பையில் இருக்கிறது. ரயில் சார்ஜுக்காக நூறு ரூபாய் போக, மீதும் பணத்தை எடுத்துக்கொண்டு ஊருக்குத் திரும்பி விடலாம். அப்படியே அந்தப் பணத்தை பண்ட் ஆபீஸில் கட்டி உன் சங்கிலியையும் வாங்கிப் போட்டு விடுகிறேன். இந்த மாதச் செலவும் மிச்சமாகும். எப்படி என் யோசனை?''

கோமதியின் கண்கள் மகிழ்ச்சியால் பிரகாசித்தன. தன் கணவருடைய புத்திசாலித்தனத்தைக் கண்டு வியந்தாள் அவள். தன் கழுத்தில் சில காலமாக விடைபெற்றிருந்த அந்தச் சங்கிலி, மின்னுவதை மானசீகமாக அனுபவித்தாள் அவள்.

விடியற்காலை நேரம். வண்டி கும்பகோணத்தை அடைந்தது. சித்தப்பா ஸ்டேஷனுக்கு வந்திருந்தார்.

''என்னப்பா இப்படித் திடீர்ப் பிரயாணம்?''

''ஹி...ஹி... இவள் இந்தப் பக்கம் கோயில் எல்லாம் பார்த்ததில்லே. குழந்தைகளுக்கும் லீவு விட்டாய் விட்டது. அதனால் தான் இப்படித் திடீர்னு...'' வெளிவந்த வார்த்தைகளில் ஏனோ அசடு வழிந்தது.

கும்பகோணத்தில் வேறு என்ன இருந்தது? மாற்றி, மாற்றிக் கோயில்கள்தான். தினம் வேளைக்கு ஒரு கோயிலாகச் சித்தி, குழந்தைகள் எல்லோரையும் அழைத்துக்கொண்டு சென்று வந்தனர்.

சித்தப்பாவின் கண்டிப்பு அந்த வீட்டில் பிரசித்தம். அவருக்குச் சாப்பிடும்போது சத்தம் போடுவது பிடிக்காது. வீட்டில் பொருள்கள் இடம் மாற்றி இருக்கக்கூடாது. தரையில் குப்பை போடக் கூடாது. இதற்கெல்லாம் நேர் விரோதம் மாலாவும் சீதாவும். குப்பைகளுக்கு இடையே வளர்ந்தவர்கள் அவர்கள். குழந்தைகளிடம் இவ்வளவு நாட்களாகத் தான் கண்டிப்பாக இல்லாததன் பலனை நன்கு உணர ஆரம்பித்தான் சேகர்.

சித்தப்பா திடீரென்று கிராமத்துக்குப் புறப்பட்டு விட்டார். போகும்போது அவர் சேகரிடம் கூறியதிலிருந்து, சேகர் குடும்பம் ஊரை விட்டுக் கிளம்பிய பிறகுதான் அவர் ஊருக்குத் திரும்புவார் போலிருந்தது.

அன்று ஊருக்குப் புறப்படும் தினம். கோமதி சேகரைத் தேடி வந்தாள்.

''இதோ பாருங்கள், சித்திக்கு நாம் ஏதாவது செய்ய வேண்டும். என்ன சொல்கிறீர்கள்?''

''நம் நன்றியைத் தெரிவித்துக் கொள்வோம்.''

''வெறும் நன்றி போறாது. ஒரு வாரம் உட்கார்ந்து வேளா வேளைக்குச் சாப்பிட்டிருக்கிறோம். ரகுவுக்கு டிராயர் சட்டையும், சாந்தாவுக்கு ஒரு பாவாடையும்...''

''ஏய், நீயே கட்சி மாறி விட்டாயா? நம் திட்டம் என்ன ஆவது?''

''அதெல்லாம் தெரியாது. இல்லாவிட்டால் சித்திக்குப் புடவை ரவிக்கையாவது வாங்கி விடுங்கள்.''

''வேண்டாம், வேண்டாம். நல்ல வேளை! எல்லாவற்றையும் தைத்து அவர்கள் போட்டுக்கொள்வதைக் கண்ணால் கண்டு களிக்க வேண்டும் என்று சொல்லாமல் இருந்தாயே, சந்தோஷம்.''

சேகர் கும்பகோணம் கடைத் தெருவில் திரிந்து கொண்டிருந்தான்.

ஒருவாறு சித்தப்பா வீட்டில் விடைபெற்றுத் தஞ்சாவூர் செல்லும் பஸ்ஸில் ஏறி அமர்ந்தார்கள் சேகர் தம்பதிகள். தஞ்சாவூரிலிருந்து அருகிலுள்ள கிராமத்துக்கு மற்றொரு பஸ். பெரியம்மாவின் வீட்டைத் தேடிக் கண்டுபிடித்தபோது பகல் பன்னிரண்டு மணி ஆகிவிட்டது. பஸ்ஸை விட்டு இறங்கியதும் குழந்தைகள் நச்சரிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

''இதோ பார், பெரியம்மாவின் ஊருக்கு வந்துவிட்டோம். ஐந்து நிமிஷத்தில் பெரி



யம்மா விடு வந்து விடும். போனவுடன் இலையைப் போட வேண்டியதுதான்'' என்று கோமதி குழந்தைகளைச் சமாதானம் செய்து அழைத்துக் கொண்டு வந்தாள்.

பெரியம்மா வீட்டைக் கண்டு பிடிப்பதில் எந்தச் சிரமமும் இல்லை சேகருக்கு. பெரியம்மாவின் வயதுதான் அறுபதிலிருந்து எழுபதுக்கு வந்திருந்தது. குழந்தைகள் தொடர ஹாலுக்குள் நுழைந்தான் சேகர்.

ஹாலின் ஓரத்தில் பெரியம்மா முக்கி முனகியவாறு கட்டிலில் படுத்துக் கிடந்தாள். சேகரிடமிருந்து கடிதம் வந்த அறிகுறிகளோ, பெரியம்மா அதைப் படிக்கச் சொல்லிக் கேட்டதாகவோ தெரியவில்லை.

இன்னோர் அம்மாள் சமையலறையிலிருந்து வெளியே வந்தவள், ஹாலில் ஒரு குடும்பமே நிற்பதைக் கண்டு பிரமித்தவள், சமாளித்துக்கொண்டாள்.

''நீங்கள்ளாம் எங்கே யிருந்து வர்றேள்?''

''நாங்கள் மெட்ராஸ். இது எங்கள் பெரியம்மாள். அம்மாவோட சொந்த அக்கா. என்மேல் உயிரா இருப்பா. நாங்க வருவதாகக் கடுதாக போட்டிருந்தேனே?''—தடுமாறினான் சேகர். குழந்தைகள் தொண தொணப்பு ஒரு பக்கம். அவர்கள் பசி எல்லை மீறிவிட்டது. கோமதி விழித்தாள். தர்மசங்கடமான நிலை. சட்டென்று சமாளித்துக் கொண்டாள்.

''பாட்டி, சீக்கிரம் அடுப்பைப் பற்ற விடுங்கோ. ஒரு குழம்பை வைத்துச் சாதத்தை வடியுங்கோ'' — அந்த ஒண்டிக் கட்டைப் பாட்டி பெரியம்மாவின் தனிமையை அறிந்து சிநேகம் செய்து கொண்டு நிரந்தரமாக அங்கு ஒண்ட வந்தவள். இப்போதுதான் முதல் தடவையாக உறவினர்களைப் பார்க்கிறாள். வந்தவள் உடனே அதிகாரம் செய்தது கிழவியின் மனத்தில் 'சுருக்'கென்றது.

கோமதி சேகரைத் தனியே அழைத்தாள். ''இதோ பாருங்கோ; இந்தக் கிராமத்தில் எங்கேயாவது காப்பிக் கடை, ஹோட்டல் ஏதாவது இருந்தால் குழந்தைகளை அழைத்துச் சென்று ஏதாவது வாங்கிக் கொடுங்கோ'' என்றாள்.

அடுத்த நிமிஷம் 'பாண்டை' மாட்டிக் கொண்டு பன்னிரண்டு மணி வெய்யிலில் ஒவ்வொரு கையிலும் ஒவ்வொரு குழந்தையைப் பிடித்துக் கொண்டு சேகர், அந்தக் கிராமத்தை வளைய வந்து கொண்டிருந்தான்.

கோமதி சமையல் அறையில் போராடிக் கொண்டிருந்தாள். ஜுரத்தால் ஒரு வாரமாக அவதிப்பட்டுக் கொண்டிருந்த பெரியம்மாவிடம் பாட்டி மெல்ல மெல்ல அவர்களுடைய வருகையை அறிவித்துப் புரிய வைத்துக் கொண்டிருந்தாள்.

சேகர் உள்ளே வருவதற்கும் பெரியம்மா கண் விழித்து எழுந்து அமருவதற்கும் சரியாக இருந்தது.

''சௌக்கியமா பெரியம்மா?'' என்று உலக ரீதியாகக் கேட்பதே தவறு என்று பட்டது சேகருக்கு. முக்கி முனகிக் கொண்டு பெரியம்மா பேச ஆரம்பித்தாள்.

''நல்ல வேளை. பகவானாகப் பார்த்து, உன்னை அனுப்பினார். விளையாட்டுப் போல் ஒரு வாரம் ஆகிறது. என்ன ஜுரம்னே தெரியலை. நீ போய்த் தஞ்சாவூரிலிருந்து சர்மா டாக்டரை அழைச்சிண்டு வா. அவர் இந்தக் குடும்பத்துக்கே வைத்தியர். அவர் வந்தால் போதும். யானைக் குட்டி மாதிரி எழுந்து உட்கார்ந்து விடுவேன்.''—அந்தக் குடும்பத்தின் வாரிசாகப் பெரியம்மா மட்டும் தானே இருந்தாள் என்ற வியப்போடு, அந்த வைத்தியர் எப்படி இந்தப் பெரியம்மாவை யானைக் குட்டியாக மாற்றப் போகிறார் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டான் சேகர்.

''பெரியம்மா! சாப்பிட்டு விட்டுப் போகிறேன்!'' வாசற்படியில் நின்று கொண்டிருந்த கோமதியைப் பார்த்து, சேகர் பற்களை நறநறவென்று கடித்தது ஒருவருக்கும் தெரிந்திருக்க நியாயம் இல்லை.

தஞ்சாவூருக்குப் போன பிறகுதான் தெரிந்தது, குடும்ப டாக்டர் சர்மா ஊரிலேயே பிரபல டாக்டர் என்று. வீட்டு வாசலில் இரண்டு கார்கள் நின்று கொண்டிருந்தன. சேகரின் நல்ல காலம் டாக்டர் வருவதாக ஒப்புக் கொண்டு விட்டார்.

ஒரு டாக்ஸியைப் பிடித்து டாக்டருடன் வீட்டுக்கு வந்து மறுபடியும் டாக்ஸியை அனுப்புவதற்கு இருபத்தைந்து ரூபாய். ஒரு பெரிய மருந்துப் பட்டியலைக் கொடுத்து அவ்வளவும் உடனே வாங்க வேண்டும் என்று கூறிவிட்டார் டாக்டர். அதே டாக்ஸியிலேயே தஞ்சாவூருக்கு வந்து மருந்துகளை வாங்கிக்கொண்டு திரும்பினான் சேகர். மருந்துகளைப் பார்த்தவுடனேயே நிச்சயம் பெரியம்மா யானைக் குட்டியாக மாறலாம். ஆனால் சேகர்; ஏற்கனவே நோஞ்சான். அலைச்சல் வேறு.

பெரியம்மாவின் இவ்வளவு பெரிய வீட்டில் பணம் இருக்குமிடம் ஒருவருக்குமே தெரியவில்லை. கூட இருந்த பாட்டி வெறும் நிழலைத் தேடி ஒண்ட வந்தவள். பெரியம்மாவுக்கோ டாக்டர் போன பிறகு ஞாபகமாக அசதி, படபடப்பு எல்லாம் ஒன்றாக வந்து சேரவே பேச முடியாமல் செய்து விட்டன. பணத்தைப் பற்றிச் சேகர் பேச நினைத்ததும் ஞாபகமாகக் கண்களையும் மூடிக் கொண்டாள் அந்தப் பெரியம்மா. பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு வாரம் ஓட்டுவதற்குள் சேகர் கையில் இருந்த பணத்தில் நூறு ரூபாய் வரை செலவழிந்து விட்டது.

சேகர் குடும்பம் திருச்சிக்குப் புறப்பட்டது. பெரியம்மா இன்னும் யானைக் குட்டியாக மாறாததால், படுக்கையிலிருந்தவாறே விடையளித்து விட்டாள்.

தஞ்சாவூர் ஸ்டேஷனுக்கு வரும்போது, மாலை ஆறு மணி. திருச்சி செல்லும் எக்ஸ்பிரஸ் நின்றுகொண்டிருந்தது. சேகர் அவசரம் அவசரமாக டிக்கெட்களை வாங்கி வருவதற்கும் வண்டி புறப்படுவதற்கும் சரியாக இருந்தது.

திருச்சியில் கோமதியின் சித்தி வீட்டைக் கண்டு பிடிப்பது அந்தச் சிறிய சந்தில் மிகவும் சிரமமாக இருந்தது. சித்தி, சித்தப்பா இருவரும் மிகவும் பிரியமாக இருந்தார்கள். அங்கு ஒரு வாரம் கவலை யில்லாமல் ஓட்டி விடலாம் என்று கணக்குப் போட்ட சேகர், அருகிலிருந்த ஸ்ரீரங்கம், திருவானைக்காவல், சமயபுரம், வயலூர், விராலிமலை — இப்படி ஒவ்வொன்றாகப் பார்வையிட்டு வந்தான்.

நான்கு நாட்கள்தான் ஓடியிருக்கும். திடீரென்று சித்தியின் பெண்ணும் மாப்பிள்ளையும் ஒரு மாத விடுமுறையில் அங்கு வந்து இறங்கினார்கள். இடநெருக்கடி வேறு. சேகர் குடும்பம் தானாகவே விடைபெற வேண்டியதாயிற்று.

கையிருப்பைக் கணக்குப் போட்ட சேகர் ஓர் அவசர முடிவுக்கு வந்தான்.

''கோமதி! இன்று இரவு வண்டியில் சென்னைக்குத் திரும்ப வேண்டும்.''

''திருவண்ணாமலை? அண்ணா வீடு?''

''திருவண்ணாமலை ஆசிரமத்தில் போய் நிரந்தரமாகத் தங்க வேண்டியதுதான். நீ இப்போது கிளம்பப் போகிறாயா இல்லையா?''

கோமதி நடுங்கி விட்டாள். எப்படியிருந்தால் என்ன, ஊருக்குத் திரும்பியதும் சங்கிலி வந்துவிடும் என்று கூடவே மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டாள். குழந்தைகளுக்கோ சொல்ல முடியாத வருத்தம். சென்னைக்குப் போனால் 'போர்' அடிக்கும், அவர்களைப் பொறுத்தவரை. சேகருக்கோ எல்லாமே படுதோல்வி.

மறுநாள் சென்னைக்குத் திரும்பியது அந்தக் குடும்பம்.

வீட்டுக்குள் நுழைந்ததும் விட்டுச் சென்ற பிரச்னைகள் எல்லாம் அவனைச் சூழ்ந்து கொண்டு விட்டன. சம்பளத்தை முன்பணமாக வாங்கிவிட்டதால் அடுத்த மாதம் எதுவும் வராது. பிரச்னைகள் எதுவும் தீராத நிலையில் சென்று வந்த பயணத்தையும் எண்ணிப் பார்த்தான் சேகர். அது உல்லாசப் பயணமாகவா இருந்தது? எல்லாமே அனாவசியம் என்ற முடிவுக்கு அவன் வந்து தன்னைத் தானே நொந்து கொண்டபோது, வாசலில் தபால்காரர் குரல் கேட்டது. கடிதம் திருவண்ணாமலையி லிருந்து வந்திருந்தது. கடிதத்தைப் பிரித்து மெதுவாகப் படித்த சேகர், பலத்த குரலில் அறிவித்தான்.

''கோமதி! நீ திருவண்ணாமலை போகவில்லை என்று வருத்தப்பட்டது உன் அண்ணா மன்னிக்கு எப்படியோ தெரிந்து விட்டது. அவர்கள் உடனே புறப்பட்டு வருகிறார்கள். உன் அண்ணா பிள்ளைக்குக் கண்ணில் ஏதோ கோளாறும். சென்னையில் நம் வீட்டில் தங்கிப் பிரபல டாக்டரிடம் காண்பித்து, சிகிச்சை செய்து கொள்ள வேண்டுமாம். நாளைக் காலை திருநெல்வேலி எக்ஸ்பிரஸில் வருகிறார்கள்.''

குழந்தைகள் மகிழ்ச்சியால் குதித்தன. கோமதி கணவனின் முகத்தைப் பார்த்தாள். சேகரின் முகத்தில் எந்த விதமான பிரதிபலிப்பும் இல்லை.

கோமதியின் சங்கிலி — அது இன்னும் சில காலத்துக்கு நிம்மதியாக 'பண்ட்' ஆபீஸில் இருக்க வேண்டியதுதான்; எவ்வளவு மாதங்களோ, வருஷங்களோ தெரியாது.

# படித்துப்பாருங்கள்

## விவாஹ மந்திரார்த்தங்கள்

தேவர்களுக்கும் பிதிரர்களுக்கும் மனிதன் ஆற்ற வேண்டிய கடமைகளைச் செவ்வனே செய்வதற்கும், தாம் வாழும் சமூகத்துக்கு நன்மை பயக்கவுமே இல்லறம் என்பது வைதிக மதத்தால் விதிக்கப் பட்டுள்ளது. அது வெறும் பௌதிக, லௌகிக இச்சைகளை அடிப்படையாகவோ குறிக்கோளாகவோ கொண்டது அல்ல. ஆத்ம க்ஷேமமே அதன் அடிப்படை, ஆத்ம சாக்ஷாத்காரமே அதன் குறிக்கோள். இவ்வாறு ஆத்ம நலனுக்காக அமைந்தாலும் அது சமூகத்துக்கும் பயன் தருகிறது; மனிதனின் இயற்கை வேகங்களையும் பூர்த்தி செய்கிறது; தேவ, பிதிருக்களுக்கும் நலன் தருகிறது. இப்படிப்பட்ட மகத்தான நோக்கத்தில் அமைந்த வைதிகமான விவாகத்தில் உள்ள சடங்குகளும், மந்திரங்களும் மிகுந்த அர்த்த புஷ்டி வாய்ந்தவை. மனித இயல்புகளையும் மனித வாழ்வையும் வெகு நுணுக்கமாக, காரிய நோக்கோடு பார்த்து, ஏற்க வேண்டியவற்றை ஏற்று, தள்ள வேண்டியவற்றைத் தள்ளி உயர் நலம் பெற உபாயமாக இந்த மந்திரங்களை ரிஷிகள் தந்துள்ளனர்.

இவற்றை நல்ல பழகு தமிழில் உரிய மேற்கோள்களுடன் காலஞ்சென்ற தர்மரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் ''காமகோடி பிரதீப''த்தில் தொடராக எழுதி வந்தார்கள். ஆங்காங்கு ஆங்கிலத்திலும் விளக்கங்கள் கொடுத்திருந்தார்கள். அது இப்போது அழகிய நூல் வடிவம் பெற்றிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த கவி வேங்கடாத்வரி, ''உபநயனமும் கல்யாணமும் வெறும் திருவிழாவாகி விட்டனவே'' என்று தமது ''விச்வ குணாதர்ச சம்பூ''வில் வருந்துகிறார். இன்றோ நிலைமை கேட்கவே வேண்டாம். இப்படிப்பட்ட சமயத்தில் ஒரு சில வதூவரர்களேனும் இந்த அரிய நூலைப் படித்து, பரம புனிதமான விவாக மந்திரங்களின் பொருளை அறிந்தால்—இல்லறத்திலும் அதன்படி ஒழுகினால்—காலஞ்சென்ற தர்மரக்ஷாமணியின் ஆன்மா குளிரும்.

இந்த நூலில் — முக்கியமாக வேத மந்திரங்களைக் கொண்ட நூலில் — அச்சுப் பிழைகள் காண்பது வருந்தத்தக்குரியது. 96ம் பக்கத்து விஷயம் அப்படியே 97ம் பக்கத்திலும் மறுபடியும் காணப்படுகிறது. அடுத்த பதிப்பில் மிகவும் கூர்ந்து பரிசீலித்து அச்சுப் பிழையே இன்றி வெளியிட வேண்டும். 'மந்திரங்களை எழுதிப் படித்துப் பாடம் பண்ணக் கூடாது, காதால் கேட்டுக் கேட்டு, வாயால் திருப்பித் திருப்பிச் சொல்லியே பாடம் பண்ண வேண்டும்' என்ற விதியைப் பல்லாயிரம் ஆண்டுகளாக அப்பியசித்து வந்திருப்பதன் நியாயம் இதிலிருந்து புரிகிறது.

இந்நூலை விவாக **காலத்தில்** தருவதற்குரிய அன்பளிப்பு என்று சொல்லக் கூடாது. விவாகம் **நிச்சயமான** உடனேயே வதூ வரர்களுக்கு அன்பளிப்பாக வழங்கினால் படித்துப் பொருளுணர்ந்து பயனடையலாம்.

வெளியீடு: ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், 4, ஃபிரான்சிஸ் ஜோஸப் தெரு, **சென்னை—1;** விலை ரூ. *3.00*.




□ இக்குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

'கல்கி' இதழில் காலஞ்சென்ற ஸ்ரீ ஹரிஹர சர்மா அவர்களைப் பற்றிய குறிப்பினைப் படித்தேன்.

''மகா கவி பாரதியாருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்ற அவருடைய முயற்சியினால்தான் பாரதி பிரசுராலயம் உருவாகிப் பாரதியாரின் நூல்கள் அழிந்துவிடாமல் காப்பாற்றப்பட்டன'' என்று எழுதியிருப்பது சரியல்ல.

பாரதியார் இறந்தவுடனேயே, அவரது மனைவியாரால் சேகரிக்கப்பட்டுக் காப்பாற்றி வரப்பட்ட கைப்பிரதிகளையெல்லாம் ஒவ்வொரு தலைப்புக்கும் ஒவ்வப் பிரித்தெடுத்துப் புத்தக வடிவில் முதல் முதலாக அச்சில் ஏற்றியவர் காலஞ்சென்ற கடையம் ஸ்ரீ ஆர். அப்பாதுரை அய்யர் அவர்கள். இவர் ஸ்ரீமதி செல்லம்மா பாரதி அவர்களின் சொந்தத் தமையனார்; பாரதியார், அரவிந்தகோஷ் இவர்களுடன் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைச் செலவிட்டவர். பாரதி பிரசுராலயம் என்று நிறுவியவரும் ஸ்ரீ அப்பாதுரை அய்யர் அவர்களே. புத்தகங்கள் தென்னிந்தியா முழுமையும் நன்கு விற்பனையாயின.

இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் ஸ்ரீ அப்பாதுரை அய்யர் அவர்கள் அதை விட்டுச் சென்றதும், ஸ்ரீ ஹரிஹர சர்மா ஸ்ரீமதி செல்லம்மா பாரதி அவர்களுக்கு உதவியாகப் பாரதி பிரசுராலயத்தைப் பராமரித்து வந்தார்.

சென்னை-44
23–7–71 கே. எல். சுந்தரராமன்

□ அமைச்சர் இராஜாராம் பேசுகையில் பஸ் தேசிய மயக் கொள்கையின் முக்கிய நோக்கம், மக்கள் நலன், தொழிலாளர் நலன்; பின்தான் இலாப நஷ்டக் கணக்கு என்று கூறியுள்ளார். இப்பொழுது அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட விகிதம் மைலுக்கு மூன்று பைசா என்று இருந்தாலும் தனியார் துறையில் இரண்டு பைசாதான் வாங்குகிறார்கள். மேலும் தனியார் பஸ் நிறுவனங்கள் பொது மக்களுக்கு மிகுந்த சௌகரியங்களைச் செய்து தருகின்றன. பஸ்கள் நல்ல நிலைமையில் உள்ளன. அரசாங்கத்துக்கு ஏகப்பட்ட வரி கட்டிய பின்னும் இலாபம் கண்டு நல்ல வசதிகளும் செய்து தருகின்றன மக்களுக்கு. போட்டி இருந்தால்தான் தரம் கூடும். அரசினர் பஸ்ஸின் நிறமே முதலில் மனத்தில் வெறுப்பைத் தோற்றுவிக்கிறது. அது விடும் புகையோ மயக்கம் தருகிறது. அது போகும் வழியில் உள்ள மரங்கள் பட்டுவிடும்போல அதன் புகையின் தன்மை உள்ளது. அரசினர் பஸ்ஸில் பிரயாணம் செய்தால் குறித்த இடத்துக்குப் போய்ச் சேருவோமா என்ற நம்பிக்கையும் இல்லை. இந்த நிலைமையில் எல்லாவற்றையும் அரசே ஏற்று நடத்தப் போகிறதாம். நினைத்தாலே மனம் நடுக்கம் கொள்கிறது.

கோயம்புத்தூர்-14
23–7–71 வி. கே. சீனுத்துரை

நடந்த 16–7–71 தேதிய ''தமிழரசு'' அரசாங்க வெளியீட்டில் (மாதமிருமுறை) ''தலைவன் கட்டுகிறான் பாலம்'' என்ற சிறுகதையில், செந்தில் எனும் மாணவன் பள்ளி செல்வதைத் தவிர்த்து, திரைப்படக் கொட்டகையில் காட்சிக்கான டிக்கெட்டுகளைக் கள்ளச் சந்தையில் விற்று அதிலிருந்து கிடைக்கும் வருவாயைப் ''பிச்சைக்காரர் நிதி''க்கு அளிப்பதாகப் பெருமையுடன் தாயாரிடம் கூறுகிறான். கொள்ளையிட்ட பணத்தைத் தானம் செய்வதில் என்ன பெருமை! மக்களுக்கு நல்ல செயல்களைப் பரப்ப வேண்டிய பொறுப்புள்ள அரசாங்க ஏடு, அதுவும் குறிப்பாக மாணவர் சமுதாயத்திடம் நல்ல செய்கைகளை வளர்க்க வேண்டிய அரசு, இம்மாதிரியான கதைகளை வெளியிட்டால், அதைப் படிக்கும் மாணவர் சமுதாயம் எவ்வாறு உருப்படும் ?

திருச்சிராப்பள்ளி
28–7–71 கோ. அண்ணுகுட்டி

ரேடியோவில் கிரிக்கெட் கமெண்டரியை மிகுந்த ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தேன். தற்போது நடந்து முடிந்த இங்கிலாந்து — இந்தியா முதல் டெஸ்ட் வர்ணனையைத்தான் அத்தனை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தேன். மணி சுமார் ஒன்பதரை இருக்கும். என் தாயார் கேட்டார்கள்: ''என்னடா, ரேடியோ அருகிலேயே தவம் செய்கிறாய்? நாங்கள் எல்லாரும் தூங்க வேண்டாமா?''

''கிரிக்கெட் வர்ணனையைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன், அம்மா !'' என்றேன்.

''நன்றாக விளையாடுனார்கள், போ. இந்த ராத்திரி வேளையில்கூட என்ன கிரிக்கெட் விளையாட்டு வேண்டியிருக்கிறது?'' என்று என் தாயார் அலுத்துக் கொண்டதைக் கேட்டதும் நான் அடக்க முடியாமல் சிரித்தேன்.

திருவண்ணாமலை
28–7–71 ஏ. சங்கரன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon